

# அம்புலிமாமா

ஜூலை 1993



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.

# மங்கை

ஜூலை 1993

☆ நாகநாத சுவாமி கோயில்

(அருள்வலம்)

☆ "ஞாபக சக்தி வளர ..."

(சித்த வைத்தியம் கட்டுரை)

☆ மேனகை (மகாபாரதச் சிறுகதை)

☆ இனிய இல்லறம்

☆ நாட்டிய மனிதன்

☆ முதல் மாணவி (பேட்டி)

இதர வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/.

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'   நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி





## புத்தகம் நம் நண்பன்

இப்போது படிக்கும் பழக்கம் பற்றிப் பலமான பேச்சு அடிபடுகிறது. புத்தக வெளியீட்டில் இந்தியா உலகில் எட்டாவது இடத்தை வகிக்கிறது. நம்நாடு 1300 தினசரிகளையும் 6000 வாரம் பத்திரிகைகளையும் நூற்றுக் கணக்கில் மாதப் பத்திரிகைகளையும் மற்ற பத்திரிகைகளையும் வெளியிட்டு வருகிறது. இதனால் சாதாரண இந்தியன் நிறையப் படிக்கிறான் என்றாகிவிடாது. அவன் ஒரு ஆண்டிற்கு சுமார் 35 பக்கங்களே அதாவது பத்தாயிரம் வார்த்தைகளே படிக்கிறான்.

குழந்தைகள் விஷயம் பரவாயில்லை. நம் நாட்டில் 7,40,000 பள்ளிகளில் 40 சதவிகிதம் புத்தக நிலையங்களைக் கொண்டவை. ஆரம்பப் பள்ளிகள் தாம் அநேகமாக புத்தக நிலையங்களைக் கொண்டிருக்கவில்லை. இவை பற்றிக் கவலைப்படாமல் இப்போதுள்ள நூல் நிலையங்களை மாணவர்கள். சரியாகப் பயன்படுத்துகிறார்களா என்பதே கேள்வி.

இந்நூல் நிலயங்களில் போதிய புத்தகங்கள் இருந்தால் நன்கு பயனடையலாம். சில பள்ளிகளில் நூல் நிலைய நேரம் என ஒதுக்கி குழந்தைகளைத் தாம் படித்த புத்தகங்கள் பற்றி எழுத வைக்கிறார்கள். குழந்தைகளுக்கு மிக எளிதில் படிக்கும் வழக்கத்தை ஏற்படுத்தலாம். ஆம். அதற்கு அவர்களுக்குப் புத்தகங்களைக் கொடுக்க வேண்டும்.

பள்ளிகள் இப்போது திறந்தாகி விட்டன. எனவே பள்ளி நூல் நிலையங்களைப் பயன்படுத்த சிறுவர் சிறுமிகளை ஊக்குவிக்க வேண்டும். புத்தகத்தை விடச் சிறந்த நண்பன் இல்லைதான்.


மதிமுகம்: 93   ஜூலை 1993   புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ. 4-00   வருட சந்தா: ரூ. 48-00






செய்திகளும் தகவல்களும்:

# ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி

காஞ்சி காமகோடிப் பீடாதிபதியான மகாப் பெரியவர் ஸ்ரீசந்திர சேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளின் நூற்றாண்டு விழா 1993 மே மாதம் ஆரம்பமாகி ஓராண்டு காலம் முழுவதும் விமரிசை யாகக் கொண்டாடுவது என்று பக்த கோடிகள் தீர்மானித்திருக்கிறார்கள். மகாப் பெரியவர் போல இவ்வளவு நீண்ட காலத்திற்கு வேறு யாரும் எந்த மடத்திலும் பீடாதிபதியாக இருக்க வில்லை என்பது யாவரும் அறிந்ததே.

தற்போதைய பீடாதிபதியான மகாப் பெரியவர் 86 ஆண்டுகளுக்கு முன் ஆதி சங்கரரின் வாரிசாக காஞ்சிபுர மடத் திற்கு நியமிக்கப்பட்ட 68வது சங்கரா சாரியார் ஆவார். இவரது நியமனமே அதிசயமானது. 66வது சங்கராசாரியா ரான ஸ்ரீசந்திரசேகரச் சரஸ்வதி அவர் கள் 1906ல் பனிரெண்டு வயதான சுவாமிநாதன் என்ற சிறுவனைக் கண்டார். சுவாமிகள் அச்சிறுவனின் கண்களில் அபூர்வ ஒளி மின்னுவதைக் கண்டார். அச்சிறுவன் ஜகத்குரு ஆகும் லட்சணங்களை யும் அவர் பார்த்தார். தனக்குப் பிறகு அச்சிறுவனே காஞ்சி மடத்தின் பீடாதிபதியாக வேண்டுமென அவர் தம்மோடு வந்த பண்டிதர்களிடம் கூறினார்.

அடுத்த ஆண்டில் 66வது சங்கராசாரியார் காஞ்சிபுரத்திற்கருகே உள்ள கலவை என்ற கிராமத்தில் பரமபதம் எய்தினார். அப்போது சுவாமிநாதன் திண்டிவனத்தில் ஒரு கிருஸ்துவ பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். சுவாமிநாதனின் பெரியம்மா வின் மகன் ஏற்கனவே காஞ்சி பீடாதிபதியுடன் இருந்த தால் அவரை 67வது சங்கராச் சாரியாக நியமித்தார்கள். அதைக்கேட்ட சுவாமி நாதனும் அவனது தாயாரும் அந்தப் பெரியம்மாவைப் பார்க்கச் சென்றார்கள்.

தாயும் மகனும் காஞ்சிபுரத்தை அடைந்தபோது காமகோடி மடத்தைச் சார்ந்த ஒருவர் சுவாமிநாதனைத் தாயிடமிருந்து பிரித்து கலவைக்கு அழைத்துச் சென்றார். வழியில் அவர் அப்போதைய பீடாதிபதியும் உடல் நலம் குன்றிவிட்டதால் சுவாமி நாதன்தான் 68வது சங்கராசாரியாராக வேண்டும் என வேண்டினார். அதாவது அவன் அப்போதே குடும்ப வாழ்க்கையை விட்டு விடவேண்டும்.

மகாப் பெரியவர் இதைச் சிரித்தவாறே கூறி "எதிர்பாராதவிதமாக இப்படி

நிகழ்ந்தது என்னைத் திகைக்க வைத்தது. மாட்டு வண்டியில் போய்க் கொண்டிருந்த நான் மீத நேரத்தை ராம நாமத்தை ஜெபித்தவாறே கழித்தேன்'' என்றார்.

தந்தி கொடுத்து சுவாமிநாதன் தம் தந்தையின் அனுமதி பெற்றார். 1907 பிப்ரவரி 13ல் காஞ்சி காமகோடி பீடாதிபதியாக சுவாமிநாதன் பதவி ஏற்றார். 66வது ஆசாரியாரின் பெயரையே அவர் சூட்டிக் கொண்டார்.

இளம் வயதினரான சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் முதன்முதலில் செய்ய வேண்டியது ஏகாந்தத்தில் யாவற்றையும் கற்க வேண்டும் என உணர்ந்தார். அதன் படிக் கற்றும் தவம் இருந்தும் உலகத்தைக் காக்க அல்லும் பகலும் ஆத்மீக சாதனையில் மூழ்கினார். 1909 முதல் 21 ஆண்டுகள் ஆதிசங்கரரைப் போல இவரும் நாடு முழுவதும் பயணம் மேற்கொண்டு 'திக்விஜயம்' செய்தார். எவ்வளவு தூரமானாலும் இவர் நடந்தே சென்றார். தவிர்க்க முடியாது போன போதுதான் பல்லக்கைப் பயன்படுத்தினார்.

பண்டிதரான மகாப் பெரியவருக்கு லத்தீன், பிரெஞ்சு, கிரீக் போன்ற 17 மொழிகள் தெரியும். கிரேக்க ராஜமாதா அவரை 'நிர்மலமான அத்யாத்மீக சொரூபம்' என்றும் அவரது புதல்வியார் 'அவரை தரிசிப்பது பூரணத்துவத்தை தரிசிப்பதாகும்' என்று மனம் நெகிழ்ந்து கூறினார்கள். அமெரிக்க அயல்நாட்டு அதிகாரி ஒருவர் அவரை 'சன்னியாசிகளிலே சக்கரவர்த்தி' என வர்ணித்தார்.

1927ல் காஞ்சிபுரத்திற்கு வந்த காந்திஜீ மகாப் பெரியவருடன் பேசிக் கொண்டிருக்கையில் ராஜாஜீ காந்திஜியிடம் ''உணவு வேளை வந்து விட்டதே'' எனவே, காந்திஜீ ''ஆசாரிய சுவாமிகளுடன் பேசிக் கொண்டிருப்பதை விட வேறு உணவு எதற்கு?'' என்றாராம்.

சாதாரணமாக 84 ஆண்டுகள் வாழ்ந்து விட்டாலே நூறு பௌர்ணமிகளைக் கடந்தால் நூறாண்டுகள் கழிந்தன எனக் கூறி சதாபிஷேகம் செய்து கொள்வது நம் வழக்கம். ஆனால் காஞ்சி மகாப் பெரியவரோ முழுவதுமாக நூறு ஆண்டுகள் வாழ்ந்து காட்டியதால் பக்தர்கள் ஒரு வருட காலத்திற்கு நூற்றாண்டு விழாக் கொண்டாடத் தீர்மானித்திருக்கிறார்கள்.

''வாழ்க்கை எனக்குக் கற்பித்தது என்ன?'' என்ற கட்டுரையில் மகாப் பெரியவர் சில ஆண்டுகளுக்கு முன் இவ்வாறு குறிப்பிட்டார். ''எனக்கு வாழ்க்கை கற்பித்தது இது ஒன்றே. பிறருக்காக வாழவே கடவுள் ஒருசிலரைப் படைத்திருக்கிறார்''

மகாப் பெரியவரின் அருள்வாக்குகள்:

பல மதங்களும் கொள்கையிலும் வேறுபடுவது இயல்பே. இது தவறு அல்ல. இவற்றை ஒன்றாக்கவும் தேவை இல்லை. ஆனால் மதங்களிடையே சகிப்புத் தன்மையும் ஒத்துப் போவதும் மிகவும் முக்கியம்.

ஒரு ஒழுங்கு, கட்டுப்பாடு இல்லாது எந்த வேலையும் இந்நாட்களில் உலகில் செய்து விட முடியாது. இது இல்லையேல் சிக்கல்களில் அகப்பட்டு மீள்வது கடினம். எனவே ஒழுங்கும் கட்டுப்பாடும் நமக்கு மிகவும் தேவை. பிறருக்கு எவ்விதக் கஷ்டமும் கொடுக்காமல் நம் கடமைகளை எச்சரிக்கையுடனும் முழுமனதுடனும் செய்தாலே இவை நம்மை அடையும். நல்ல செயல்களைச் செய்ய இவை துணைபுரிவதால் மனதைத் தூயதாயும் மகிழ்ச்சியுடனும் இவை இருக்கச் செய்யும்.





# மாமியார் நல்லவளே!

பாறையூரில் பரந்தாமன் என்பவர் இருந்தார். அவர் பரம சாது. நல்லவர். அவரது மனைவி பர்வதமோ அவருக்கு நேர் எதிரிடை. மகா வாயாடி. தன்னை மிஞ்சி யாரும் இல்லை என்ற நினைப்பு. அவளது மகள் ரமா.

ரமாவிற்கு விவாக வயதும் வரவே ஒரு வழியாக அவளது பெற்றோர்கள் அவளுக்கு ரங்கசாமி என்ற வாலிபனைத் தேர்ந்தெடுத்தார்கள். கல்யாணம் ஆனதும் ரமாவை அவளது கணவன் வீட்டிற்கு அனுப்பப் பர்வதம் ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தாள். அப்போது ரமாவைப் பார்க்க அவளது சிநேகிதி சியாமளா வந்தாள்.

சியாமளாவுக்கு அதற்கு முந்திய வருடம்தான் விவாகம் நடந்தது. அதனால் பர்வதம் அவளிடம் "உன் புகுந்த வீடு எப்படிப் பட்டது?" என்று கேட்டாள். சியாமளாவும் "பரவாயில்லை" என்று சுவாரசியம் இல்லாமலே கூறினாள். பர்வதம் அவளை விட்டு விடுவாளா என்ன? துருவி துருவிக் கேட்டு விஷயங்களைத் தெரிந்து கொண்டாள்.

சியாமளாவின் மாமியார் அவளைக் கொடுமைப்படுத்துகிறாளாம். எல்லா வேலைகளையும் அவள் மீது சுமத்துகிறாளாம். அவளுக்கு வேளா வேளைக்குச் சரியாக சாப்பாடு இல்லையாம். இதை எல்லாம் அவள் தன் கணவனிடம் சொன்னால், அவன் தன் தாயாருடன் சியாமளா அனுசரித்துக் கொண்டு தான் போக வேண்டும் என்கிறானாம். இவை எல்லாம் சியாமளா ரமாவின் முன் பர்வதத்திற்கு

—பாபநாசம் சாமா—

அளித்த தகவல்கள்.

சியாமளா ரமாவிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றதும் பர்வதம் தன் மகளிடம் "பார்த்தாயா சியாமளாவின் மாமியாரின் போக்கை. உன் மாமியாரும் இதுபோலதான் இருப்பாள். அதனால் நீ அவளை அடக்கு. அவள் சொல்வதைக் கேட்காதே. நீ உன்னிஷ்டப்படி நட. அப்போதுதான் உன் கணவன் வீட்டில் நீ சுகமாக இருக்க முடியும்" என்று உருவேற்றினாள்.

ரமாவும் தன் கணவன் வீட்டில் தன் தாயார் கூறியது போலவே நடக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு கிளம்பினாள். அவளது தந்தை கூறிய அறிவுரைகளான "மாமியாரை மதித்து நட, கணவன் பேச்சுக்கு எதிர்ப் பேச்சு பேசாதே" என்றெல்லாம் கூறியது அவளுக்குச் செவிடன் காதில் ஊதிய சங்கு போலாயிற்று.

ரமாவின் மாமியார் காந்தம்மாள் மிகவும் நல்லவள். யாரிடமும் உரக்கக் கூட பேச மாட்டாள். நிதானமாக எதையும் யோசித்துக் கூறுவாள். ஆனால் தப்பிதம் செய்தால் உட்னே கண்டிக்கும் சுபாவம் உடையவள்.

ரமா வந்த அன்று காந்தம்மாள் மாலை வேளையானபோது "ரமா! சுவாமி விளக்கை ஏற்றி வை" என்று சமையல் கட்டிலிருந்து கூறினாள். ஆனால் மாமியார்



சொற்படி நடக்கக் கூடாது என்று தன் தாய் கூறியதைக் கடைப்பிடிக்க நினைத்த ரமா சுவாமி விளக்கை ஏற்றவில்லை.

சற்று நேரத்திற்குப் பின் காந்தம்மாள் சமையல் கட்டிலிருந்து வெளியே வந்த போது பூஜை அறையில் சுவாமி விளக்கு ஏற்றப்படாதிருப்பதைக் கண்டாள். அப்போது அவளே அந்த விளக்கை ஏற்றிவிட்டு ரமாவிடம் "ரமா! உன்னிடம் சுவாமி விளக்கை ஏற்றச் சொன்னேனே. ஏன் ஏற்றவில்லை?" என்று கேட்டாள்.

ரமாவும் "என் வீட்டில் வேலை எல்லாம் என் தாயார்தான் செய்வாள். நான் செய்ய மாட்டேன். அதனால்தான் இங்கும் வேலை செய்யமாட்டேன்" என்றாள் மிடுக்காக. அதுகேட்டு காந்தம்மாள் "அது உன் பிறந்த வீடு. அங்கு நீ எப்படி வேண்டுமானாலும் இருந்திருக்கலாம். ஆனால் இங்கே நீ குடும்பம் நடத்த வந்திருக்கிறாய். நீதான் எல்லா வேலைகளையும் செய்தாக வேண்டும்" என்றாள் தீர்மானமாக. தன் மாமியார் வேலைகளை எல்லாம் தன் மீது சுமத்தப் பார்க்கிறாள் என்று ரமா எண்ணி விட்டாள்.

அதுமுதல் மாமியாருக்கும் மருமகளுக்குமிடையே சச்சரவுகள் தோன்றின. மாமியார் சொல்வதற்கு நேர்மாறாகவே ரமா நடக்கலானாள். இதை கவனித்த ரங்கசாமியும் ரமாவைக் கண்டிக்





கலானான். இதனால் ரமாவுக்குக் கோபம் வர கணவன் மனைவி யிடையேயும் மனஸ்தாபங்கள் மூண்டன.

இப்படி இருக்கும்போது ஒரு நாள் ரமாவைக் காண அவளது சிநேகிதி சியாமளா வந்தாள். அப்போது ரமா அவளிடம் தன் மாமியார் தன்னை எவ்வாறு நடத்துகிறாள் என்பதை ஒவ்வொரு சம்பவமாக அன்று வரை நடந்ததை விவரமாகக் கூறினாள். முடிவில் அவள் "என் மாமியாரின் காரணமாக எனக்கும் என் கணவருக்கும் இடையே கூடப் பூசல்கள் ஏற்பட்டு விட்டன" என்றாள்.

அதையெல்லாம் கவனமாகக் கேட்ட சியாமளா "அட பைத்தியமே! நீதான் என்ன முட்டாள் தனம் செய்து விட்டாய்! நீ சொன்னதைக் கொண்டு பார்த்தால் உன் மாமியார் ரொம்பவும் தங்கமானவள் என்று தெரிகிறது. நீதான் அவரை எதிர்த்து வாயாடி வீணாக மனக்கசப்பை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறாய்" என்றாள்.

அதுகேட்டு ரமா திகைத்து "அப்படியா சொல்கிறாய்? என் கல்யாணம் ஆன அன்று என்னைப் பார்க்க வந்த நீ உன் மாமியார் உன்னை நடத்தும் விதம் பற்றிக் கூறினாயே. நீ சரியாக வேலை செய்தால் கூட அதில் குற்றம் காண்கிறாள் என்றாயே. அதைக் கேட்ட பின் என் தாயார் என்னிடம் மாமியார் சொல்கிறபடி நடக்காதே என்றாள். மாமியாரை அடக்கி ஆள வேண்டும் என்று அறிவுரையும் கூறினாள். அதன் படித்தான் நான் நடந்து வருகிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட சியாமளா ஆச்சரியப்பட்டு "உலகில் எல்லா மாமியார்களும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. உன் மாமியாருக்கும் என் மாமியாருக்கும் எவ்வளவு வித்தியாசம்! ஏணி வைத்தால் கூட எட்டாதே. உன் அம்மா இந்த மாதிரி அறிவுரை

சொல்லி இருக்கக் கூடாது. நீ அவற்றை மறந்து விடு. நீ உன் வாழ்க்கையைப் பாழடித்துக் கொள்ளாதே. உன் மாமியார் தங்கமானவள். அவள் சொல்வது எல்லாம் உன் நல்லதற்கே. அவர் சொல்கிறபடி நடந்துபார். உனக்கும் மனநிம்மதி ஏற்படும். குடும்பத்திலும் எவ்வித சண்டையும் சச்சரவும் இராது'' என்றாள்.

தன் சிநேகிதி சியாமளா கூறியதைக் கேட்ட ரமா ''சரி. உன் அறிவுரைப்படி நடந்து பார்க்கிறேன். அதன் விளைவு என்ன என்றும் தெரிந்து விடும்'' என்றாள். சியாமளாவும் ''எல்லாம் நல்லதாகத்தான் இருக்கும். நீயே பார்'' என்று கூறி ரமாவிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றாள்.

மறுநாள் அதிகாலையில் ரமா எழுந்திருந்து குளித்து விட்டுப் சமையலறைக்குச் சென்றாள். அது கண்டு காந்தம்மாள் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தாள். வழக்கம் போல காந்தம்மாள் வாசலில் கோலம் போட கோலப் பொடியை எடுக்கவே ரமா அதை வாங்கிக் கொண்டு ''நீங்கள் சிரமப்பட வேண்டாம் அத்தை. நான் போய் வாசலில் கோலம் போடுகிறேன். இனிமேல் வீட்டு வேலைகளைச் செய்வது எல்லாம் என் பொறுப்பு. நீங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

ரமா வாசலில் கோலம் போட்டு முடித்ததும் காந்தம்மாள் வருவோர் போவோரிடம் எல்லாம் ''என் மருமகள் எவ்வளவு அழகாகக் கோலம் போட்டிருக்கிறாள் பார்த்தீர்களா? காரியத்தில் அவள் படு சுட்டி. தங்கக் கட்டி. இப்படிப்பட்ட மருமகள் எல்லோருக்கும் கிடைக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்'' என்று புகழ்ந்து கூறலானாள்.

ரங்கசாமியும் தன் மனைவியிடம் ஏற்பட்ட மாறுதலைக் கண்டு மகிழ்ந்து போனான். ரமாவும் தன் சிநேகிதி சியாமளாவை மனதார வாழ்த்தினாள். அவளது அறிவுரைப்படி நடந்ததால்தான் மன நிறைவு ஏற்பட்டது. தன் தாயின் சொற்படி நடப்பது சரியல்ல என உணர்ந்தாள். அக்குடும்பம் மகிழ்ச்சியில் திளைத்தது.



# போதனையை ஏற்றான்!

சூரபுர மன்னன் சூரசேனன் எல்லோரையும் துன்புறுத்தி அடித்து உதைக்கும் மனப்பான்மை கொண்டவன். போர் புரிந்து, அடிமைப்படுத்தி வீரர்களை சித்திரவதை செய்து மகிழ்பவன். அவனது அமைச்சர் சாந்தசீலர் அஹிம்சை பற்றி எவ்வளவு எடுத்துக் கூறியும் அவன் அவரது அறிவுரைகளை ஏற்க வில்லை.

ஒருமுறை சத்தியானந்தர் என்ற யோகியை சாந்தசீலர் வரவழைத்து இராமா யணம், மகாபாரதம், பாகவதம் முதலியவற்றிலிருந்து அஹிம்சை பற்றிய கதைகளை சூரசேனனுக்கு எடுத்துச் சொல்லச் சொன்னார். அவர் சொன்ன கதைகளை எல்லாம் சூரசேனன் கவனமாகக் கேட்டான்.

அவன் சத்தியானந்தரை வணங்கி "சுவாமி! தாங்கள் எனக்குக் குருவுக்கு சமானம். தங்களுக்கு குருதட்சணையாக என்ன கொடுக்க வேண்டும்" என்று கேட்டான். அவரும் "நீ உன் நாட்டில் அஹிம்சையை எல்லோரும் கடைப்பிடிக் கச் செய்தால் அதுவே நீ எனக்குக் கொடுக்கும் குருதட்சணை" என்றார்.

சூரசேனனும் அப்படியே செய்கிறேன் என்று கூறிவிட்டு சேனாதிபதியை அழைத்து "இன்றிலிருந்து நம் நாட்டில் எல்லோரும் அஹிம்சையைக் கடைப் பிடிக்க வேண்டும் என நான் உத்தரவிட்டுள்ளதாக நாடெங்கும் அறிவித்து விடுங்கள். யாராவது அஹிம்சையைக் கடைபிடிக்கத் தவறினால் சித்திரவதை செய்யப்பட்டு கொல்லப்படுவார்கள் என்றும் கூடவே அறிவித்து விடுங்கள்" என்றான்.

இதைக் கேட்ட சத்தியானந்தரும் சாந்தசீலரும் திகைத்து எதுவும் பேசாமல் கல்லாகி நின்றனர்.






## 3

*[மன்னன் பிரதாபவர்மனும் இளவரசி பிரியம்வதையும் ராஜகுரு அதிசய மலருக்கு ஏற்பட்ட சாபம் பற்றிக் கூறியதைக் கேட்டார்கள். மாணிக்யபுரியின் தென்பகுதியில் திடீரென வீடுகள் தரைமட்டமாகிவிடவே அப்பகுதி மக்கள் பயந்து ஓடுகிறார்கள் என்று சேனாதிப்தி கம்பீர சிம்மன் மன்னனுக்குத் தெரிவித்தான். அதன் பிறகு–]*

கடற்கரைப் பகுதியில் இருந்த வீடுகள் திடீரெனத் தரை மட்டம் ஆனதற்கு யாருக்கும் காரணம் தெரியவில்லை. புயலோ கடல் கொந்தளிப்போ நிலநடுக்கமோ எதுவும் ஏற்படவில்லை. ஆனால் வீடுகள் மட்டும் இடிந்து தரைமட்ட மாகின. இதற்குக் காரணத்தை ஒவ்வொருவனும் தன் மனதில் தோன்றியதைக் கூறலானான். அவ்வளவு வீடுகள் இடிந்தும் உயிர்ச் சேதம் எதுவும் ஏற்படாதது ஆச்சரியத்திலும் ஆச்சரியமே.

இதனால் பயந்து ஓடிவந்த மக்கள் சிலர் தலைநகரை அடைந்தார்கள். நகரவாசலில் இருந்த காவல் வீரர்கள் அதுபற்றி சேனாதிபதிக்குத் தெரிவிக்கவே அவனும் அவர்கள் தங்க பிரத்தியேக முகாம்களை ஏற்படுத்திக் கொடுத்தான். சில



அகதிகள் கோவில் மண்டபங்களில் தங்கினார்கள். வேறு சிலர் வசந்தோற்சவம் நடந்த மைதானத்தில் இருந்தார்கள்.

இளவரசி தன் தோழிகளை அழைத்து அகதிகளில் பெண்களையும் குழந்தைகளையும் அரண்மனையில் ஒரு பகுதியில் இருக்கச் செய்ய ஏற்பாடுகளைச் செய்தாள். இதற்கு அவள் நள்ளிரவு வரை விழித்திருந்து எல்லாம் செய்து முடித்து பிறகு உறங்கச் சென்றாள்.

காலையானதும் மன்னனும் சேனாதிபதியும் அகதிகளாக வந்த மக்களைச் சந்தித்தினர். மன்னனைக் கண்டதும் அம்மக்கள் "வீடு வாசல்களை இழந்து கட்டிய துணியுடன் ஓடிவந்து விட்டோம். மறுபடியும் நாங்கள் வாழ்ந்த இடத்திற்குச் செல்ல பயமாக இருக்கிறது. ஒரு வேளை போய் வீடுகளைக் கட்டிக் கொண்டாலும் மறுபடியும் இந்த மாதிரி நடக்காது என்பது என்ன நிச்சயம்? எப்போது என்ன நடக்குமோ என்று பயந்து கொண்டே இருக்கிறோம்" என்றார்கள்.

அப்போது சேனாதிபதியும் "நான் சில வீரர்களைத் தென்பகுதிக்கு அனுப்பி இருக்கிறேன். அவர்கள் எந்த ஆபத்தையும் சமாளிக்க அங்கு தயாராகவே இருக்கிறார்கள். தரைமட்டமான வீடுகளிலிருந்து யாரும் எதையும் எடுத்துச் செல்லாத விதத்தில் காவல் காத்தும் வருகிறார்கள். இரவும் பகலும் மாறி மாறி வீரர்கள் அப்பகுதிகளில் சுற்றி வந்து காவல் புரிந்து கொண்டிருக்கும்படிக் கட்டளை பிறப்பிக்கப்பட்டுள்ளது. எனவே நீங்கள் உங்கள் பொருள்கள் களவு போய்விடுமோ என்று பயப்பட தேவையில்லை" என்று அவர்களிடம் கூறினான்.

மன்னனும் "சபாஷ். சரியான ஏற்பாடுகள்தான்" எனக் கூறவே சேனாதிபதியும் "மற்றொரு நற்செய்தி. அகதிகளாக வந்துள்ள பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் அரண்மனையின் தென் வளாகத்தில் இளவரசியார் இடம் ஒதுக்கித் தந்திருக்கிறார். நேற்றிரவு வெகு

நேரம் வரை அங்கு இருந்து எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டுத் தான் அவர் தூங்கப் போனார். இந்த சேதியை அவரது தோழி களே என்னிடம் சொன்னார்கள்'' என்றான்.

மன்னன் அவனை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென் றான். இருவரும் அரண்மனை யின் தென் வளாகத்தை அடைந்த போது அங்கு பெண்களும் குழந்தை களும் வரிசையாக உட்கார்ந்திருப் பதைக் கண்டார்கள்.

சற்று நேரத்தில் பிரியம்வதை தன் பணிப்பெண்களுடன் அங்கு வந்தாள். அவர்களது கைகளி லுள்ள பாத்திரங்களில் உணவுப் பொருள்கள் இருந்தன. அவற்றை எடுத்து அவர்கள் உட்கார்ந்திருந்த வர்களுக்குப் பரிமாறினார்கள். எல்லோரும் திருப்தியுடன் சாப்பிடு வது கண்டு மன்னன் பூரித்துப் போனான்.

அவன் தன் மகளைப் பார்த்து "பிரியம்வதையே! நீ இவ்வாறு செய்வது பாராட்டத்தக்கது. துன் பத்தில் மூழ்கியுள்ளோரின் துயர் துடைப்பதே மனிதப் பிறவி எடுத்ததன் பொருளாகும். இதை உணர்ந்து நீ செயல்படுவதைக் கண்டு நான் பெருமிதம் அடை கிறேன்.'' என்றான்.

பிரியம்வதையும் ஒரு புன்னகை புரிந்தவாறே தலை அசைத்து "நீங்கள் கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். இவர்களுக்கு எந்தக்





குறையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் மற்ற இடங்களில் உள்ளவர்களை கவனித்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

மன்னனும் சேனாதிபதியும் அங்கிருந்து கிளம்பி அரண்மனைத் தலைவாசலுக்கு வந்தார்கள். அப்போது நான்கு வீரர்கள் அவசர அவசரமாகச் சேனாதிபதியை நோக்கி வந்தார்கள். சேனாதிபதியும் அவர்களிடம் "என்ன விஷயம்? ஏன் பதட்டமாக இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அவர்களும் "நேற்று தென்பகுதிக்குச் சென்ற வீரர்கள் காணப் படவில்லை!'' எனவே சேனாதிபதியும் "ஏன்? என்ன ஆனார்கள்?'' என்று கேட்டான் அந்த வீரர்களும் "அதை விசாரிக்கலாம் என்றால் அங்கு ஒரு வீரன் கூட இல்லை. இன்று காலை நம் வீரர்கள் சென்ற போது ஒரு காவல் வீரன்கூட அங்கு இல்லாமல் இருப்பதைக் கண்டனர். இப்போது மேலும் சில கிராமங்களும் தரை மட்டமாகியுள்ளதாகவும் தெரிய வந்துள்ளது'' என்றார்கள்.

அதுகேட்டு சேனாதிபதி "காலையில் போன வீரர்கள் திரும்பி வந்தார்களா?'' என்று கேட்டான். அவ்வீரர்களும் "மூன்று வீரர்கள் வந்து இந்தத் தகவலைச் சொல்லிவிட்டு அவர்கள் திரும்பிச் சென்றார்கள். அவர்களுடன் நம் தளபதி வீரசிம்மனும் போயிருக்கிறார்'' என்றார்கள்.

சேனாதிபதியும் "அப்படியா? சரி, வீரசிம்மன் வந்ததும் என்னை வந்து பார்க்கச் சொல்'' என்றான். "அப்படியே சொல்கிறோம்'' என்று கூறிவிட்டு அவர்கள் சென்றனர்.

அப்போது மன்னன் "மேலும் சில கிராமங்கள் தரைமட்டமானதை யாரிடமும் சொல்ல வேண்டாம். அது தெரிந்தால் மக்கள் இன்னமும் பயந்து போவார்கள். இது இரகசியமாகவே இருக்கட்டும். கடற்கரைப் பகுதிக்குச் சென்ற தளபதி திரும்பி வந்ததும் நாம் அநேகமாக நம் படைகளோடு போக வேண்டிய அவசியம் நேரிட

லாம். அதனால் நம் படைகளையும் தயார் நிலையில் வைத்திருக்க வேண்டும்'' என்றான்

சேனாதிபதியும் ''அப்படியே செய்கிறேன். தளபதி வந்ததும் தங்களை வந்து பார்க்கிறேன்'' என்று கூறிவிட்டு மன்னனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

வீரர்களுடன் கடற்கரைப் பகுதிக்குச் சென்ற தளபதி வீரசிம்மன் அன்று மாலையே அவசர அவசரமாகத் திரும்பி வந்தான். வந்ததும் அவன் முதலில் சேனாதிபதியைத் தான் கண்டான்.

சேனாதிபதி அவனைப் பார்த்து ''என்ன அவசர அவசரமாக ஓடி வந்திருக்கிறாயே. ஏதாவது முக்கியமான தகவல் உண்டா?'' என்று கேட்டான். வீரசிம்மனும் ''சேனாதிபதியாரே! எல்லாம் அதிசயமாகவே இருக்கிறது. நேற்று போன வீரர்கள் கடற்கரையை அடைந்தார்கள் என்பது பற்றிச் சந்தேகமே இல்லை. ஏனெனில் அவர்களின் காலடிச் சுவடுகள் கடற்கரை மணலில் நன்கு பதிந்திருப்பதைக் கண்டேன். ஆனால் அவர்கள் அங்கே போனபிறகு என்ன நடந்தது என்றுதான் தெரியவில்லை. அதுபற்றிக் கூற அங்கே.ஒரு ஈ, காக்காய் கூட இல்லை'' என்றான்.

சேனாதிபதியும் ''அப்படியானால் இனி என்ன செய்யப் போவதாக உத்தேசம்?'' என்று கேட்டான். அதற்கு வீரசிம்மன் ''நாம் இனி அனுப்பும் வீரர்களை மூன்று





பிரிவுகளாகப் பிரிப்போம். முதலாவது பிரிவு கடற்கரைக்குப் போகட்டும். அதற்குப் பின்னால் சற்று தூரம் தள்ளி இரண்டாவது பிரிவு நிற்க வேண்டும். அந்த இரண்டாவது பிரிவுக்கும் சற்று தூரம் தள்ளி மூன்றாவது பிரிவு நிற்க வேண்டும். இந்த மூன்று பிரிவுகளுக்குமிடையே தொடர்ந்து தகவல்கள் பரிமாறப்பட்டுக் கொண்டே இருக்கப்பட வேண்டும். இவற்றை இப்போது செய்யச் சொல்கிறேன். நாளைக் காலை நான் மறுபடியும் போய் தகவல் சேகரித்து வருகிறேன் என்றான்.

சேனாதிபதியும் "சரி, அப்படியே செய்" என்று கூறிவிட்டு அரண்மனைக்குள் சென்றான். அங்கு அவன் மன்னனிடம் விஷயத்தைக் கூறிவிட்டு அகதிகள் முகாமைப் பார்வையிடச் சென்றான். அங்கு எல்லோருக்கும் உணவு, படுக்கை வசதி செய்யப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்துத் திருப்தி அடைந்தான். அரசாங்க வீரர்களோடு நகர மக்களும் சேர்ந்து அகதிகளை நன்கு கவனித்துக் கொண்டார்கள். இதைக் கண்டு சேனாதிபதி மகிழ்ந்து போனான்.

மறுநாள் காலையில் வீரசிம்மன் சேனாதிபதியைக் காண அவனது இல்லத்திற்கு வந்தான். அவனைக் கண்டதுமே சேனாதிபதி "என்ன! அதற்குள் நீ கடற்கரைப் பகுதிக்கும் போய்விட்டு வந்து விட்டாயா?" என்று கேட்டான்.

வீரசிம்மனும் "நான் கடற்கரைப் பகுதிக்குக் கிளம்பலாம் என்று சற்றுமுன் வீட்டில் முன்பகுதி வந்தேன். அப்போது நான்கு வீரர்கள் வந்து அந்த பயங்கரச் செய்தியைக் கூறினார்கள். அந்த பூதம் மறுபடியும் வந்ததாம்" என்றான்.

சேனாதிபதி ஆச்சரியத்துடன் "பூதமா?" என்று கேட்டான். வீரசிம்மனும் "ஆமாம். பூதம்தான். அது நள்ளிரவில் சமுத்திரத்திலிருந்து வெளியே வந்ததை வீரர்கள் பார்த்தார்களாம். அது தரை மீது நடந்து வருகிறதா, தண்ணீர் மீது நடந்து வருகிறதா, அல்லது காற்றில்

மிதந்து வருகிறதா என்பது கூடத் தெரியவில்லையாம். ஆனால் அது தன் தலையை இப்படியும் அப்படியும் ஆட்டி கொண்டு போகும் போது அதன் காலின் கீழுள்ள வீடுகள் அமுங்கிப் போகின்றன வாம். வீட்டிலுள்ள மனிதர்களும் பொருள்களும் பூமிக்கு அடியில் புதைந்து போக வீடு தரைமட்டமாகி விடுகிறதாம்'' என்றான்.

சேனாதிபதியும் 'ஓ! இது விசித்திர பூதமாக இருக்கிறதே'' எனவே வீரசிம்மனும் ''ஆமாம். அது சத்தமில்லாமல் வருகிறதாம். தன் தலையை அப்படியும் இப்படியுமாக ஆட்டிக்கொண்டே வடக்கு நோக்கிச் செல்கிறதாம்'' என்றான்.

வீரசிம்மன் மேலும் கூறப்போவதைக் கேட்க சேனாதிபதி தயாரானான்.

அப்போது வீரசிம்மன் ''நம் வீரர்கள் ஒருவேளை அந்த பூதத்தை எதிர்த்திருந்தால் அவர்களும் பூமிக்குள் புதைந்து மறைந்து போயிருப்பார்கள். அவர்கள் பயந்து போய் ஓடி வந்ததால்தான் இவ்வளவு விஷயங்கள் தெரிந்தன'' என்றான்.

சேனாதிபதி சற்று யோசித்து விட்டு ''சரி. அது வடக்கு திசையில் சென்றதாகக் கூறினாய். அது இரவில் கடலிலிருந்து வெளியே வந்ததால் சூரியோதயம் ஆவதற்குள் மறுபடியும் வடதிசையில் நம் வீரர்களில் சிலரை அனுப்பு: அங்கும் ஏதாவது இந்த மாதிரி விபத்துகள் ஏற்பட்டிருக்கலாம். கடற்கரைத் தென்பகுதியில் வழக்கம் போல காவல் ஏற்பாடுகள் நடக்கட்டும் நேற்றிரவு போலவே வீரர்களை மூன்று பிரிவுகளாக்கி நிறுத்திவை. அந்த விசித்திர பூதம் பற்றி ஏதாவது புதிய தகவல் தெரிந்தால் உடனே அதை எனக்குத் தெரிவி. நான் இந்த விஷயத்தை மன்னரிடம் கூறுகிறேன். இந்த ஆபத்திலிருந்து மக்களைக் காப்பது நம் கடமை'' என்றான்.

(தொடரும்)






# யார் நல்ல நண்பன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ விடாப்பிடியாக இந்தச் செயலில் இறங்கி இருப்பதைப் பார்த்தால் நீ யாருக்காவது உதவத்தான் முயல்கிறாயோ அல்லது பேரும் புகழும் பெற்று உன் அதிகாரத்தை நிலைநாட்ட முயல்கிறாயோ என்ற சந்தேகம் எனக்கு எழுகிறது. உனக்குச் சிரமம் தெரியாது இருக்க ஒரு கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

## வேதாளம் சொல்லும் கதை



உலகநாதன் என்ற சாதாரண வியாபாரியின் மனைவி உமையாள். அவளுக்குப் பட்டணத்தில் போய் வாழவேண்டும் என்ற தீராத ஆசை இருந்தது. உலகநாதன் ஓவியம், இசை ஆகிய கலைகளிலும் வல்லவன்.

உலகநாதன் தன் கிராமத்திலிருந்த வீடு வயல்களை எல்லாம் விற்றுப் பணமாக்கிக் கொண்டான். அவன் தட்டுமுட்டு சாமான்களை எல்லாம் ஒரு இரட்டை மாட்டு வண்டியை வாடகைக்குப் பேசி அதில் ஏற்றினான். அதில் அவனும் உமையாளும் ஏறி உட்கார்ந்து கொண்டு பட்டணத்திற்குச் சென்றனர்.

கொஞ்ச தூரம் போனதும் அந்த வண்டியின் அச்சு முறிந்தது. அதைக் கவனித்த வண்டிக்காரன் உலகநாதனையும் உமையாளையும் சட்டென இறக்கிவிட்டு வண்டியை அங்கே நிறுத்தினான். சற்று நேரத்திற்கெல்லாம் எதிர்புறத்திலிருந்து ஒரு இரட்டை மாட்டு வண்டி வந்தது. வண்டிக்காரன் அந்த வண்டியை நிறுத்தி அதிலுள்ளவர்களிடம் தன் வண்டியின் அச்சு முறிந்ததைக் கூறி ஏதாவது உதவி செய்யுமாறு கேட்டான்.

வந்த வண்டியிலிருந்து ஒரு மீசைக்காரர் இறங்கி வந்தார். அவர் "இதில் யார் வந்தார்கள்? அவர் எனக்கு தெரிந்தவராக இருந்தால் கண்டிப்பாக உதவுகிறேன்" எனக் கூறிக் கொண்டே உலகநாதனை நோக்கி வந்தார். உலகநாதனும் அவரைப் பார்த்துக் கொண்டே "இவரை எங்கோ நான் பார்த்திருக்கிறேனே" என்று எண்ணலானான்.

இருவரும் பேசிக்கொண்டு தாம் பள்ளியில் ஒன்றாய்ப் படித்தவர்கள் என்று தெரிந்து கொண்டார்கள். வந்தவர் பெயர் குருசாமி. அவர் பட்டணத்தில்தான் இருப்பவர். பெரும் பணக்காரர்.

குருசாமி உலகநாதனிடம் "நண்பா! நான் இப்போது அவசர வேலையாகப் போய்க் கொண்டிருக்கிறேன். பட்டணத்தில் என்

வீட்டு முகவரியைக் கொடுக்கிறேன். நீ அங்கேயே தங்கி இரு. நான் திரும்பிவர இரண்டு மாதம் ஆகும். அதனால் என்ன? நான் வந்து ஒரு நல்ல வீடாகப் பார்த்து அதில் குடி வைக்கிறேன். இப்போது அடுத்த கிராமத்திற்குப் போய் வேறொரு வாடகை வண்டியை அனுப்பி வைக்கிறேன். அது வரும் வரை நீ இங்கேயே இரு. வெகுநாட்களுக்குப் பின் ஆருயிர் நண்பனை இப்போது தான் சந்திக்கிறேன். இந்த உதவியைச் செய்யாமல் போவேனா?'' என்று கூறினான்.



உலகநாதனும் ரொம்ப சந்தோஷம் எனவே குருசாமி அவனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான். அப்போது உமையாள் "பட்டணத்தில் உங்களுக்கு இப்படி ஒரு நண்பர் இருப்பதாக என்னிடம் கூறவே இல்லையே'' என்று கேட்டாள்.

உலகநாதனும் "பல வருடங்களுக்கு முன் நானும் குருசாமியும் ஆறுமுகமும் ஒன்றாக ஒரே பள்ளியில் படித்தோம். நாங்கள் மூவரும் உயிர்த்தோழர்கள். என் சித்திரங்களை இருவரும் பாராட்டுவார்கள். அவர்களுக்கும் நான் பல படங்களை வரைந்து கொடுத்திருக்கிறேன். கிராமத்துப் பாடல்களை நான் பாட அவர்கள் ரசித்துக் கேட்பார்கள். பள்ளிப்படிப்பு முடிந்ததும் அவர்கள் இருவரும் பட்டணம் போய்விட்டார்கள். அதற்குப் பிறகு இப்போதுதான் நான் குருசாமியைச் சந்தித்தேன்'' என்றான்.

"அப்படியானால் உங்களது இன்னொரு நண்பர் ஆறுமுகமும் பட்டணத்தில் தான் இருக்கிறாரா?'' என்று உமையாள் கேட்டாள்.

உலகநாதனும் "ஆமாம். ஆனால் ஆறுமுகத்தை பற்றிக் கேட்ட போது குருசாமி வேண்டா வெறுப்பாக பதில் கூறினான். ஆறுமுகம் முன்போல இல்லையாம். முற்றிலும் மாறிவிட்டானாம். அவனைப் பற்றித் தன்னிடம் பேச வேண்டாம் என்றும்



மாகப் போக வேண்டுமானால் உன் வண்டியைத் திருப்பிக் கொண்டு அடுத்த தெரு வழியே போ'' என்றான்.

வண்டிக்காரன் வந்து உலகநாதனிடம் விஷயத்தைச் சொல்லவே உலகநாதனும் அந்த ஆறுமுகனார் யார் என்று பார்க்கச் சென்றான். அவன் வேறு யாருமில்லை. அவனது பள்ளித் தோழன் ஆறுமுகமே. நண்பர்கள் இருவரும் ஒருவரை மற்றொருவர் அடையாளம் கண்டு கொண்டு மகிழ்ச்சியுடன் பேசிக் கொண்டார்கள்.

அவர்களது பேச்சு குருசாமியைப் பற்றிப் போகவே ஆறுமுகம் "ஆமாம். அவன் இதே ஊரில் இருக்கிறான். ஏதோ பணம் சம்பாதித்து விட்டானாயினும் என்னைப் போல பெரிய பணக்காரன் அல்ல. அதனால் அவனுக்கு என் மீது பொறாமைதான்'' என்றான்.

பிறகு அவன் "நான் நாளை வெளிநாடு போகத் திட்டமிட்டேன். என் நண்பன் நீ வந்து விட்டதால் கொஞ்ச நாட்களுக்குத் தள்ளிப் போடுகிறேன். உன்னை என் கணக்கன் சொக்கன் என் வீட்டிற்கு அழைத்துப் போவான்'' என்று கூறி சொக்கனை அழைத்து "சொக்கா! இவரை என் வீட்டு வரை கொண்டுபோய் விட்டு வா'' என்று கூறி உலகநாதனோடு அனுப்பி வைத்தான்.

குருசாமி கூறினான்'' என்றான்.

குருசாமி அனுப்பிய வண்டி வந்ததும் உலகநாதன் அதில் தன் சாமான்களை ஏற்றித் தன் மனைவியோடு அதில் ஏறி உட்கார்ந்துக் கொண்டான். இரண்டு நாட்களானதும் வண்டி பட்டணத்தை அடைந்தது. அது ஒரு குறுகிய சந்து வழியே போனபோது எதிரே ஒரு வண்டி வந்ததால் உலகநாதனின் வண்டி முன்னே செல்ல முடியவில்லை.

வண்டிக்காரன் கீழே இறங்கி எதிரே இருந்த வண்டிக்காரனை விசாரிக்க "இது ஆறுமுகனாரின் வண்டி. யாரும் இதை நகரச் சொல்ல முடியாது. நீ அவசர

உலகநாதன் சொக்கனை அழைத்துக் கொண்டு தன் வண்டி நின்ற இடத்திற்குப் போனான். ஆறுமுகத்தின் வண்டி முன் நகர பின்னால் உலகநாதனின் வண்டி சென்றது.

சொக்கன் அதற்கு வழிகாட்டி ஆறுமுகத்தின் வீட்டு வாசலில் வண்டியை நிறுத்தச் சொன்னான். பிறகு அவன் "வீட்டு வரை கொண்டு போய்விடத்தான் என் எஜமானர் சொன்னார். உங்களை இங்கே விட்டு விட்டேன். என் வேலை முடிந்து விட்டது" என்று கூறித் திரும்பிப் போய்விட்டான்.

அதுகண்டு உலகநாதன் திகைத்துப் போனான். பிறகு அவன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு அந்த மாளிகைக்குள் போய் வாசல் கதவைத் தட்டினான். கதவைத் திறந்து கொண்டு ஆறுமுகத்தின் மனைவி வந்தாள்.

உலகநாதன் அவளிடம் "நீங்கள் ஆறுமுகத்தின் மனைவிதானே?" என்று கேட்கவே அவளும் கடு கடுப்புடன் "ஆமாம். யார் நீங்கள்? என்ன விஷயம்?" என்று முகத்தைச் சுளித்துக் கொண்டு கேட்டாள். உலகநாதனும் "நான் ஆறுமுகத்தின் நண்பன். உங்கள் கணவர் என்னை இங்கே அனுப்பி இங்கே தங்கி இருக்கச் சொன்னார்" என்றாள்.

அவளோ "எனக்கு நீங்கள் யாரென்று தெரியாது. உங்களைப்



பற்றி ஒரு தடவை கூட என் கணவர் கூறியது இல்லை. முன்பின் தெரியாதவர்களுக்கு எல்லாம் நான் என் வீட்டில் இடம் கொடுக்க முடியாது" என்று கூறிக் கதவைப் படக்கென்று சாத்தினாள்.

அப்போது உலகநாதன் "அம்மா! உங்கள் கணவன் என்னை கணக்கன் சொக்கனோடு அனுப்பினான். அவனோ எங்களை வாசல்வரை விட்டுவிட்டுப் போய் விட்டான். நீங்களோ உள்ளே அனுமதிக்க முடியாது் என்கிறீர்கள். இப்படி எல்லாம் நடக்கும் என்று தெரிந்திருந்தால் நான் பேசாமல் குருசாமியின் வீட்டிற்கே போயிருப்பேன்" என்றான்.



கிழவி வீடு இருக்கிறதா என்று பார்க்கிறேன். அவளுக்குப் பணத்தைக் கொடுத்துவிட்டு நன்கு சாப்பிட்டு விட்டு நிம்மதியாக இன்றிரவு அங்கேயே தூங்கலாம். நாளை நாமே ஓர் இடத்தைத் தேடி வாடகைக்கு எடுத்துக் கொள்ளலாம்" என்று கூறினான்.

வண்டியை ஓட்டச் சொல்லி உலகநாதன் சாப்பாடு போடும் ஒரு கிழவியின் வீட்டை அடைந்தான். அவளும் "இந்த ஊரில் உங்களுக்குத் தெரிந்தவர்கள் யாருமே இல்லையா?" எனக் கேட்க உலகநாதனும் ஆறுமுகத்தின் பெயரைச் சொல்ல மனம் இல்லாமல் "குருசாமி என்று ஒருவர் இருக்கிறார். அவர் வீடு எங்கேயோ இருக்கிறது" என்றான்.

உடனே கிழவி "ஆ! குருசாமிக்குத் தெரிந்தவரா? அப்படியானால் நானே உங்களை அவர் வீட்டில் கொண்டுபோய் விடுகிறேன். அவரும் அவர் மனைவியும் மிகவும் நல்லவர்கள். தமக்குத் தெரிந்தவர்கள் யாராவது என் வீட்டில் பணம் கொடுத்துச் சாப்பிட்டார் என்பது தெரிந்தால் அவர்கள் என்னை கோபித்துக் கொள்வார்கள். அதைத் தமக்கு அவமானமாகவும் அவர்கள் நினைப்பார்கள்" என்றாள்.

அதன் பிறகு கிழவி உலகநாதனையும் உமையாளையும் குரு

அதைக் கேட்டு ஆறுமுகத்தின் மனைவி "என்ன சொன்னீர்கள்? குருசாமியின் பெயரைச் சொல்லிக் கொண்டு இந்த வீட்டிற்குள் யாரும் அடி எடுத்து வைக்க முடியாது. நீங்கள் மரியாதையாகப் போய்விடுங்கள்" என்று கூறியவாறே கதவைத் தாளிட்டுக் கொண்டு போய்விட்டாள்.

உமையாள் அப்போது "இது தான் உங்கள் நண்பனின் லட்சணமா?" எனவே உலகநாதனும் "இதோ பார். நாம் ஊரை விட்டுக் கிளம்பியபோது நான் எந்த நண்பனையும் நம்பி இங்கே வரவில்லை. அதனால் இரவில் சாப்பிட ஏதாவது உணவளிக்கும்

சாமியின் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். உலகநாதன் தன் பெயரைச் சொன்னதுமே, குருசாமியின் மனைவியும் "ஓ! நீங்கள் அவரது பள்ளி நண்பர் உலகநாதர்தானே. உங்களைப் பற்றி அவர் நிறையச் சொல்லி இருக்கிறார். நீங்கள் நன்கு சித்திரங்கள் வரைவீர்கள் என்றும் நாட்டுப் பாடல்களை இனிமையாகப் பாடுவீர்கள் என்றும் தினமும் அவர் என்னிடம் சொல்லி மகிழ்வார். வாருங்கள். அவர் உங்களிடம் சொல்லி அனுப்பியபடி அவர் வரும்வரை இங்கே தங்கி இருங்கள்" என்றாள்.



அப்போது ஆறுமுகம் ஓடோடி வந்து உலகநாதனைக் கண்டு "நண்பா! என் வீட்டில் நடந்ததை எல்லாம் கேள்விப்பட்டேன். ஏதோ நடந்துவிட்டது. அதற்காக மன்னித்து என் வீட்டிற்கு வா" என்று கூறினான்.

அப்போது உலகநாதன் சற்று யோசித்து "இல்லை ஆறுமுகம். நான் குருசாமியின் வீட்டிலேயே இருந்து விடுகிறேன்" என்றான். ஆறுமுகம் பலமுறை தன்னை மன்னித்துத் தன் வீட்டிற்கு வந்து விடும்படி உலகநாதனிடம் கூறியும் அவன் அதற்குச் சம்மதிக்கவில்லை. உலகநாதன் வராவிட்டால் அவனுக்கு இடைஞ்சல்கள் செய்யப் போவதாக ஆறுமுகம் மிரட்டிப் பார்த்தான். அப்போதும் உலகநாதன் மசியவில்லை.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே ஆறுமுகம் தன் நண்பனுக்காக தன் அயல்நாட்டுப் பயணத்தைத் தள்ளிப் போட்டும், தன் மனைவியின் தவறுதலுக்காகப் பலமுறை மன்னிப்புக் கேட்டும் உலகநாதன் அவன் வீட்டிற்குப் போகாமல் ஏன் குருசாமியின் வீட்டிலேயே இருக்கத் தீர்மானித்தான்? பெரிய பணக்காரனான ஆறுமுகம் உலகநாதன் ஆரம்பிக்கும் வியாபாரத்திற்கு உதவி இருப்பானே. குருசாமியோ தன் அவசர வேலையைப் பிறகு கவனிக்கலாம் என நினைக்காமல் தன் முகவரியை உலகநாதனிடம்

கொடுத்து அனுப்பினானே. இருவரில் சிறந்த நண்பன் யார் என உலகநாதன் யோசிக்கவில்லையா? இதற்குத் தக்க பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''உலகநாதன் நன்கு யோசித்தே முடிவு எடுத்தான். ஆறுமுகம் தன் ஆடம்பரத்தைக் காட்ட நினைத்தானே யொழிய உலகநாதனைப் பற்றி அதற்கு முன் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. தன் மனைவியிடம் அவனைப் பற்றிக் கூறியதும் இல்லை. உலகநாதன் அவன் வீட்டிற்கு வரமுடியாது என்று கூறியதும் மிரட்டியும் பார்த்தான். அதற்கும் உலகநாதன் மசியவில்லை. அதற்குக் காரணம் அவன் குருசாமியைத் தன் உண்மையான நண்பன் என நினைத்தது தான். உலகநாதனின் வண்டி அச்சு ஒடிந்து கிடந்தபோது வேறு வாடகை வண்டியை அனுப்பினான். தான் இல்லாத போதும் தன் வீட்டில் தான் வரும் வரை தங்கி இருக்கச் சொன்னான். தன் நண்பர்களை வெளி இடங்களில் சாப்பிட விடாமல் தன் வீட்டிற்கு வந்து சாப்பிட ஏற்பாடு செய்திருந்தான். தினமும் அவன் தன் மனைவியிடம் உலகநாதனைப் பற்றிக் கூறி அவனது சித்திரங்களையும் நாட்டுப் பாடல்களையும் புகழ்ந்து கூறியவன். எனவே ஆறுமுகத்தை விட குருசாமி ஆயிரம் மடங்கு மேலான நல்ல நண்பன். அதனால்தான் உலகநாதன் குருசாமியின் வீட்டில் தங்க முடிவு செய்தான். இது சரியான முடிவே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—56

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## புழுதிப் பூனை



பூனையானால் மியாவ் என்று கத்தும். நாயானால் குரைக்கும். ஆனால் புழுதிப் பூனை நாயைப் போலும் பூனையைப் போலவும் இருந்தாலும் குறைக்காது. மியாவ் எனாது. ஆனால் சிரிக்கும். தொலைவிலிருந்து சத்தம் கேட்டதும் இது பலமாகச் சிரிக்கும். அதோடு நாட்டியமும் ஆடும்.

இதன் கால்கள் நாயின் கால்கள் போலவும் உடல் பூனையைப் போலவும் இருக்கும். ஆனால் இது பூனை போல் அழகாகவோ நாய் போல் பலமுள்ளதாகவோ இராது. நிமிர்ந்த காதுகளோடு பெரிய தலையைக் கொண்டிருக்கும். பின்னங்கால்கள் பருமனாயும் குட்டையாகவும் இருப்பதால் இது பின்புறம் தாழ்ந்து இருக்கும். இது 150 செ. மீ. நீளமும் 90 செ. மீ. உயரமும் உள்ளது. சாம்பல் நிறமும் லேசாய் ஊதா நிறமும் கலந்தும் உள்ள உடலில் கருப்புக் கோடுகள் இருக்கும். காலிலும் கோடுகள் இருக்கும்.

இது உணவிற்காக வேட்டை ஆடாது. மற்ற பிராணிகள் தின்று மீதம் விட்டுப் போனதை உணவாக உண்ணும். மிகவும் பயப்படும் இது மனிதர்களை விட்டு விலகியே இருக்கும். இது குட்டிப் போட்டதும் அதனைக் கவ்விக் கொண்டு போய் விடும்.



# நம் தற்கால இலக்கியம்

பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.

ஆசிரியர்

## பீரேந்திரகுமார் பட்டாச்சாரியாவின் 'பிரதிபாத்'

அஸ்ஸாமில் பாறைப் பகுதிகளுக்கு அடியே பெட்ரோலியம் கிடைப்பது கண்டுபிடிக்கப் பட்டதும் அங்கு மலை மீது திக்பாய் என்ற நகர் உருவாகியது. இந்தியாவில் பல பாகங்களி லிருந்து கூலி வேலை செய்ய ஆட்கள் அங்கு வந்தார்கள். வேறுபட்ட மதத்தவராயினும் எல்லோரும் ஒன்றாகவே இருந்தனர். அவ்வாறு வந்தவர்களுள் சாந்தி அபீர் என்பவனும் ஒருவன்.

ஒருமுறை அபீரின் மனைவி நோய் வயப்பட்டாள். சரியான வைத்திய வசதி இல்லாத தால் அவள் தன் மகள் யமுனாவை விட்டுவிட்டு இறந்து போனாள். அதே ஊரில் தின்பேசுவர் என்ற அதிகாரி இருந்தான். அவன் ஹிந்துவாயினும் ஜஹனாரா என்ற முஸ்லீம் பெண்ணை மணக்க விரும்பினான். அதற்காக அவன் மதம் மாறித் தன் பெயரை கியாசுத்தீன் என மாற்றிக் கொண்டு அவளை மணந்து கொண்டான். ஆனால் ஒருசில நாட்களில் ஜஹனாரா நோய் வாய்ப்பட்டாள். தன் கணவனை விட்டு இறந்து போய் விடுவாளோ என அவள் பயந்தாள். தனக்கு அவ்வப்போது உதவி செய்து வந்த அபீரின் மகள் யமுனா வைத் தன் கணவன் தான் இறந்த பிறகு மணக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டு இறந்து போனாள்.

யமுனாவின் தந்தையோ கியாசுத்தீன் மீண்டும் மதம் மாறி ஹிந்து ஆனாலே தன் மகளை அவன் விவாகம் செய்து கொள்ள முடியும் என்று கூறிவிட்டான். இதே சமயம் சாட்டர்ஜி என்ற இளைஞன் யமுனாவை நேசிக்கலானான். ஆனால் அவன் அதை வெளியே சொல்லவில்லை.

அந்நகரில் பல மாற்றங்கள் ஏற்படலாயின. தொழிலாளர் தம் சொந்த சுகதுக்கங்களை மறந்து ஒன்றுபட்டுத் தம் உரிமைகளைக் கோரினார்கள். இது பிரிட்டிஷ் ஆயில் கம்பெனி முதலாளிகளுக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் நவீன யந்திரங்களைப் புகுத்திப் பல தொழிலாளிகளை வேலையிலிருந்து நீக்கி விட்டார்கள்.

தொழிலாளரிடையே கொந்தளிப்பு ஏற்பட்டது. அவர்களது ஒற்றுமையை கண்டு முதலாளிகள் பயந்தனர். முடிவில் அவர்களைப் பிரிக்க ஹிந்து முஸ்லீம் பிரச்னையைக்



கிளப்பினார்கள். ஒருவனுக்குப் பணம் கொடுத்து ஹிந்துக்களின் கோவிலில் பசு மாமிசத்தை எறியச் சொன்னார்கள். அவன் அவ்வாறு செய்யும்போது பிடிபட்டான். உடனே முதலாளிகளின் சதி அம்பலமாகியது.

இவை எல்லாம் இரண்டாவது உலகப் போர் துவங்குவதற்கு முன் நடந்தவை. அப்போதெல்லாம் பிரிட்டிஷார் வேண்டுமென்றே சுதேசிகளுடன் கலந்து உறவாடாமல் இருந்தனர். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யவே முதலாளிகள் வேறு பகுதிகளிலிருந்து ஆட்களை வரவழைத்தனர். அவ்வாறு வண்டிகளில் வந்த ஆட்களைத் தொழிலாளர்கள் வழிமறித்து நிறுத்தினர். ஒரு ஆங்கில அதிகாரி ஆத்திரமடைந்து தொழிலாளர்களைச் சுட்டான். அந்தத் துப்பாக்கி சூட்டில் யமுனாவின் தந்தை சாட்டர்ஜி, புதிதாக மணம் செய்து கொண்ட பாடகர் பருவா, கோவிலுக்குள் பசு மாமிசத்தை எறிந்தவன், முதலில் தவறான வழியில் பிளவு ஏற்படுத்த முயன்று பின்னர் அதற்காக வருந்திய நால்வர் குண்டடிபட்டு இறந்து போயினர்.

ஆங்கிலேயர்களிலும் நீதிக்கு மதிப்புக் கொடுப்போர் இல்லாமல் போய்விடவில்லை. அவர்களில் திருமதி ப்ளேமியான் ஒருத்தியாவார். அவர் துன்பத்தில் ஆழ்ந்த தொழிலாளர்களுக்கு ஆதரவாக செயல்பட்டார்.

போராட்டம் ஓயாது. அது மேலும் வலுப்பெற்று பயங்கர சூறாவளியாகத்தான் மாறும் என்று இந்த நாவல் முடிகிறது.

பிரபல அஸ்ஸாமி இலக்கிய எழுத்தாளர் பீரேந்திரகுமார் பட்டாச்சாரியா ஞானபீட விருது பெற்றவர். 1939ல் பத்தாயிரம் தொழிலாளர்கள் நடத்திய வேலை நிறுத்தத்தைப் பின்னணியாகக் கொண்டு எழுதப்பட்ட நாவல் இது என்று கூறுகிறார்கள். இதில் வரும் கதாபாத்திரங்களும் சம்பவங்களும் உண்மையில் நடப்பதுபோல வர்ணிக்கப்பட்டுள்ளது. இந்த நாவலை நேஷனல் புக் டிரஸ்ட் பல இந்திய மொழிகளில் மொழியாக்கம் செய்து வெளியிட்டுள்ளது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. மைசூர் திப்பு சுல்தானின் தலைநகர் எது?
2. கருட பட்சியும், பாம்பும் எந்த நாட்டுக் கொடியில் இடம் பெற்றுள்ளன?
3. இங்கிலாந்தில் புகையிலையை அறிமுகம் செய்து வைத்தவர் யார்?
4. 1939 செப்டம்பர் 3ல் உலகில் நடந்த முக்கிய நிகழ்ச்சி எது?
5. கவி ரவீந்திரர் எந்த நூலுக்கு நோபல் பரிசு பெற்றார்?
6. டைனமைட்டை கண்டுபிடித்தவர் யார்?
7. ஹோல்கார்களின் தலைநகரம் எது?
8. யூகலிபுடஸ் மரங்கள் அதிகமாக உள்ள நாடு எது?
9. சிலோன் எப்போது 'ஸ்ரீலங்கா' ஆயிற்று?
10. சபர்மதி சாது என்றால் யாரைக் குறிக்கும்?
11. பாரசீக நாட்டை நிறுவியவர் யார்?
12. சதி, பால்ய விவாக முறைகளை ஒழித்தவர் யார்?
13. வானவெளியில் சென்ற முதல் மனிதன் யார்?
14. சூரிய மண்டலத்தில் மிகப் பெரிய கிரகம் எது?
15. அமிர்தசரில் பொற்கோவிலை ஒரு சீக்கிய குரு வசித்த இடத்தில் கட்டினார்கள். அந்த குரு யார்?
16. ஒரு அடி நீள நாக்கைக் கொண்டிருந்தும் குரல் இல்லாத மிருகம் எது?
17. அமைதிக்கான நோபல் பரிசைப் பெற்ற மிக இளம் வயதினர் யார்?
18. ஆரிய சமாஜத்தை நிறுவியவர் யார்?
19. கோலர் தங்கச் சுரங்கங்கள் எந்த மாநிலத்தில் உள்ளன?
20. லோக்சபையைக் கலைக்கும் அதிகாரம் அதன் சபாநாயகருக்கா அல்லது வேறு யாருக்கா?

## விடைகள்

1. ஸ்ரீரங்கப்பட்டணம்.
2. மெக்சிகோ.
3. சர். வால்டர் ராலே.
4. இங்கிலாந்து ஜெர்மனி மீது போர் தொடுப்பதாக அறிவித்தது.
5. கீதாஞ்சலி.
6. ஆல்பிரட் நோபில்.
7. தற்போது மத்தியப் பிரதேசத்திலுள்ள இந்தூர்.
8. ஆஸ்திரேலியா.
9. மே 1972.
10. மகாத்மா காந்தி.
11. சைரஸ் சக்கரவர்த்தி.
12. ராஜாராம் மோகன்ராய்.
13. சோவியத் ரஷ்ய நாட்டு யூரி ககாரின்.
14. வியாழ கிரகம்.
15. குரு ராம்தாஸ்
16. ஜிராபி.
17. மார்ட்டின் லூர்தர் கிங் ஜுனியர் 35 வது வயதில்.
18. சுவாமி தயானந்த சரஸ்வதி.
19. கர்நாடகம்.
20. சபாநாயகருக்கு இல்லை. நம் குடியரசுத் தலைவருக்குத்தான்.




**மா**சிலாமணிக்கு சாது சன்னியாசி என்றாலே மதிப்பு அதிகம். ஒருநாள் அவன் தன் ஊருக்கு வந்த சிவசங்கர யோகியைத் தன் வீட்டிற்கு அழைத்து பாதபூஜை செய்தான். யோகியாரும் மகிழ்ந்து அவனது விருப்பம் என்ன என்று கேட்டார்.

மாசிலாம்ணியும் பணிவுடன் "என் மனைவிக்கு என் வீட்டில் எல்லா வசதிகளும் இருந்தும் அவளது மனது எதையோ நினைத்து வருத்தப்படுகிறது. தாங்கள் அதனைப் போக்க வேண்டும்" என்று வேண்டினான்.

யோகியாரும் மாசிலாமணியிடம் அவன் மனைவி தங்கம்மாளை அழைத்து விசாரிக்க அவளும் "எனக்கும் அதற்கு காரணம் தெரியவில்லை. என் வீட்டிற்குப் பக்கத்தில் ஒரு சிறிய வீட்டில் பொன்னம்மாள் என்பவள் வசித்து வருகிறாள். அவளுக்கு எனக்குள்ள வசதிகள் இல்லை. ஆனாலும் அவள் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கிறாள். அந்த சந்தோஷம் எனக்கு இல்லையே" என்றாள்.

யோகி சற்று யோசித்து "பொன்னம்மாள் பிறருக்கு உதவி மகிழ்வதாகத் தெரிகிறது. நீயும் அவளைப் போல மற்றவர்களுக்கு உதவி செய். அப்போது அவளைப் போல சந்தோஷமாக இருக்கலாம்" என்றார்.

தங்கம்மாளுக்கு யோகியார் சொன்னது அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அவள் அதுபற்றி யோசித்துக் கொண்டிருக்கும்போது யோகியாரைக் காண குப்பம்மாள் என்பவள் வந்தாள்.

அவள் அந்த ஊரில் நான்கு வீடுகளில் வேலை செய்து பிழைக்

—சிவனார் செல்வன்—



கலாம் என்று வந்தவள். அவளுக்கு யார் வீட்டிலும் வேலை கிடைக்க வில்லை. அப்போது பொன்னம் மாள் அவளைத் தன் வீட்டில் வேலை செய்யச் சொல்லி சாப் பாடும் போட்டு வந்தாள்.

குப்பம்மாள் தன் நிலையைக் கூறவே யோகியாரும் தங்கம்மா விடம் "இவளை வேலைக்கு வைத் துக் கொள்" என்றார். தங்கம் மாளும் "இவள் முன்பே என்னி டம் வேலை கேட்டவள்தான். என் வீட்டில் ஏராளமாக வேலைக் காரர்கள் இருப்பதால் இவளுக்கு வேலை கொடுக்கவில்லை" என் றாள்.

அப்போது யோகியார் குப்பம் மாளிடம் "நீ பொன்னம்மாள் வீட்டில் வேலை செய்கிறாயே. அவளுக்கோ பணக் கஷ்டம். அப்படி இருக்க உனக்குச் சம் பளமும் கொடுத்து சாப்பாடும் எப்படிப் போடுகிறாள்?" என்று கேட்டார்.

குப்பம்மாளும் "அவளும் அவள் கணவனும் தங்கமானவர்கள். நான் ஒரு ரூபாய்தான் சம்பளம் கேட் டேன். அவர்கள் இரண்டு ரூபாய் கொடுத்து சாப்பாடும் போடுகிறார் கள். என்னை அதிக வேலை செய் யச் சொல்லாமல் பொன்னம்மாள் தானும் பல வேலைகளைச் செய் கிறாள். நானும் வேலை செய்யா மல் பிறரிடம் பணம் வாங்கக் கூடாது என நினைப்பவள். அத னால் அவர்கள் வீட்டு வேலை யைச் சந்தோஷத்துடன் செய்கி றேன். வேறு எந்த வீட்டு வேலை கிடைத்தாலும் அந்த வீட்டை மட் டும் விடமாட்டேன். ஏனென்றால் கஷ்டமோ நஷ்டமோ அவர்கள் சற்றும் கவலைப்படாமல் என்னை கவனித்துக் கொள்கிறார்கள்" என்றாள்.

அப்போது தங்கம்மாள் "ஓ! இதுவா உன் நிலை. நீ பேசாமல் என் வீட்டிற்கு வேலைக்கு வந்து விடு. உனக்கு சாப்பாடு போட்டுப் பத்து ரூபாய் கொடுக்கிறேன்" என்று குப்பம்மாளிடம் கூறினாள். குப்பம்மாளும் "உங்கள் வீட்டில்

வேலை செய்கிறேன். ஆனால் பொன்னம்மாள் வீட்டிலும் வேலை செய்து கொண்டுதான் இருப்பேன். இதற்கு நீங்கள் சம்மதிக்க வேண்டும்'' என்றாள்.

இதற்கு தங்கம்மாளுக்கு விருப்பம் இல்லைதான். யோகியாரோ தங்கம்மாளைப் பாராட்டி ''நான் கொஞ்ச காலத்திற்குப் பிறகு இந்த ஊருக்கு மறுபடியும் வருவேன். அப்போது நீ திருப்தி அடைந்து சந்தோஷமாக இருப்பாய் என நினைக்கிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

குப்பம்மாளுக்கு தங்கம்மாவின் வீட்டில் அப்படி ஒன்றும் நிறைய வேலை இருக்கவில்லை. அதனால் தங்கம்மாள் அவளிடம் வேலை வாங்க வேண்டும் என்பதற்காக மேஜையைத் துடை, பீரோவைத் துடை, கடைக்குப் போய் சர்க்கரை வந்ததா என்று பார்த்து வா, தோட்டத்துப் பூக்களைப் பறித்து மாலை கட்டு என்றெல்லாம் நிமிடத்திற்கு நிமிடம் ஏதாவது ஒரு அற்ப வேலையைச் சொல்லி செய்யச் சொன்னாள்.

குப்பம்மாளும் முகம் கோணாமல் தங்கம்மாள் சொன்ன வேலைகளை எல்லாம் செய்தாள். ஆனால் பொன்னம்மாள் வீட்டில் அவள் உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் வேலை செய்வதைப் போலத் தன் வீட்டில் செய்யவில்லை என்ப



தைத் தங்கம்மாள் உணர்ந்தாள். ஆனாலும் குப்பம்மாள் தப்பித் தவறிக் கூடப் பொன்னம்மாளைப் பற்றி ஒரு வார்த்தை தங்கம்மாளிடம் கூறியது இல்லை. இதைக் கண்டு தங்கம்மாளின் மனம் குமுறிக் கொண்டே இருந்தது.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு யோகியார் அந்த ஊருக்குத் திரும்பி வந்தார். அவரிடம் தங்கம்மாள் தன் வீட்டில் குப்பம்மாள் உற்சாகமில்லாமல் வேலை செய்து வருவதையும் பொன்னம்மாளின் வீட்டில் மட்டுமு் உற்சாகத்துடன் வேலை செய்வதையும் கூறினாள். யோகியார் பொன்னம்மாளின் வீட்டிற்குப் போய் அங்குள்ள

நிலையை நேரில் கண்டார். பிறகு அவர் தங்கம்மாளின் வீட்டிற்கு குப்பம்மாள் செய்யும் வேலைகளை யும் கவனித்தார்.

அப்போது தங்கம்மாள் அவரி டம் "நீங்களே இரண்டு வீட்டு வேலைகளையும் பார்த்தீர்களே. ஏதாவது வித்தியாசம் இருக்கி றதா?" என்று கேட்டாள்.

யோகியாரும் "பொன்னம்மா ளின் வீட்டில் உன் வீட்டை விட வேலைகள் அதிகமே. ஆனால் பொன்னம்மாள் ஒரு சில வேலை களை மட்டுமே குப்பம்மாளைச் செய்யச் சொல்லிவிட்டு மற்ற வற்றைத் தானே செய்து கொள் கிறாள். குப்பம்மாள் செய்யும் வேலைகளில் பொன்னம்மாளும் பங்குகொண்டு அவளோடு சேர்ந்து செய்கிறாள். அவளை வேலைக் காரியாக நினைக்காமல் தன் குடும்பத்தைச் சேர்ந்தவள் எனக் கருதி நடத்துகிறாள். ஆனால் நீயோ அவளுக்கு வேண்டுமென்றே வேலைகளைக் கொடுக்கிறாய். அதுவும் அற்ப வேலைகளே. அங்கு வேலை உள்ளது. அதனால் வேலை செய்கிறாள். இங்கே நீ வேலைக்காரி இருக்கிறாள் என்ப தற்காக வேலைகளை உண்டாக் கிக் கொடுக்கிறாய். இதுதான் வித்தியாசம்" என்றார்.

அப்போது தங்கம்மாளுக்குத் தன் தவறு என்ன என்பது தெரிந் தது. அப்போது யோகி "உன் அதிருப்திக்குக் காரணம் பொறா மையே. அதை விட்டொழி. பொன்னம்மாள் உன்னை விட மகிழ்ச்சியாக இருக்கிறாள் என்ப தைக் கண்டு நீ பொறுமுகிறாய். நீயும் பொன்னம்மாள் மாதிரி பிற ருக்கு உதவு. பிறரையும் உன் மனி தர் தாம் என எண்ணு. அப்போது உன் மனம் மகிழும்" என்றார்.

தங்கம்மாள் யோகியாரின் அறி வுரையை ஏற்று நாளடைவில் மகிழ்ச்சியும் மனநிறைவும் பெற் றாள்.



# அம்புலிமாமா செய்திகள்



## ஆங்கிலம் கற்க விளையாட்டு!

ஆங்கிலம் கற்க ஸ்க்ரேபுல் என்ற விளையாட்டு உள்ளது. இது மாணவர்களின் சொல்லறிவை அதிகரிக்கிறது. ஆல்பிரட் பட்ஸ் என்ற ஒரு சிற்பி இந்த விளையாட்டை உருவாக்கினார். அவர் சென்ற ஆண்டில் தன் 93வது வயதில் இறந்தார். இந்த விளையாட்டை 1930ல் உருவாக்கினார். இதனை அவர் சில வியாபாரிகளுக்குக் காட்டி விற்க முயன்ற போது யாரும் வாங்க முன் வரவில்லை. இருபது ஆண்டுகளுக்குப் பின் ஒரு சிறு வியாபார நிறுவனம் இதனை வாங்கி விற்கத் தொடங்கியது. சிறுவர் சிறுமியர் இதனைப் பெரிதும் விரும்பினர். இதைக் கண்டு முதலில் இதனை வாங்க மறுத்த நிறுவனம் என்று இதனை வாங்கப் பெரிதும் முயன்று முடிவில் வாங்கியும் விட்டது. இந்த விளையாட்டைப் பயணம் செய்யும் போதும் விளையாட மாக்னெடிக் செல்களும் தயாரித்துள்ளது. இதன்பிறகு உலகின் பலமொழிகளிலும் விளையாடு வதற்கு ஏற்ப அமைக்கப்பட்டது. இப்போது இந்த விளையாட்டு சாதனம் கோடிக் கணக்கில் விற்பனையாகிறதாம்.

## இந்திய மாணவருக்கு அமெரிக்க ஊக்கம்

வாஷிங்க்டனுக்கு அருகிலுள்ள பேர் பாக்ஸ் கௌண்டியில் அகில்ரோஸ்தகி என்ற பதினோறு வயது சிறுவன் ஆறாவது வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறான். இவனது தாய் தீபா ஒரு வங்கியில் பணி புரிபவர். இவரது வலது கை நரம்புகள் செயல்படாமல் போயின. அதனால் ஜக்கிலிருந்து கப்பில் இவர் பால் விடும்போது தவறி வழியும். இதைக் கண்ட அகில் தன் தாயார் கஷ்டப்படாமல் இருக்க ஒரு ப்ளாஸ்டிக் ஸ்க்ரூ கொண்ட ஒரு குழாயைத் தயாரித்தான். இக்குழாய் வழியாக யாராலும் ஜக்கிலிருந்து பாலை வழியாமல் ஊற்ற முடியும். இதைக் கண்டு அவனது தாய் மிகவும் மகிழ்ந்து போனாள். அவரது நண்பர்கள் அந்தப் புதிய கண்டுபிடிப்பைப் 'பேடண்ட்' செய்து ஒரு நிறுவனத்திற்குக் கொடுத்தார்கள். இவ்வாறு அமெரிக்கப் பேடண்ட்டைப் பெற்ற மிகச் சிறிய வயதினர்களில் ஒருவனாக அகில் ஆகிவிட்டான்.






கலிபா ஹரூன் ரஷீதின் தர்பாரில் பாஹ்லுல் என்ற விதூஷகன் இருந்தான். அவன் விதூஷகன் மட்டுமல்ல சிறந்த அறிவாளியும் கூட. ஒருநாள் கலீபா விதூஷகனிடம் "நம் நாட்டில் எவ்வளவு முட்டாள்கள் இருக்கிறார்கள் தெரியுமா?" என்று கேட்டார். விதூஷகனும் தெரியும் என்றான்.

அப்போது கலீபா "அப்படியானால் அவர்களது முழு ஜாபிதா ஒன்றைத் தவறே இல்லாமல் தயாரித்துக் கொடுப்பாயா?" என்று கேட்டார். அதற்கு விதூஷகன் "அந்தப் பட்டியல் மிக நீளமாக இருக்கும். அதைவிட நம் நாட்டிலுள்ள அறிவாளிகளின் பட்டியலை எளிதில் தயாரித்து விடலாம். ஏனெனில் நம் நாட்டில் அறிவாளிகள் மிகக் குறைவு தானே!" என்று சொன்னதைக் கேட்டு கலிபா சிரித்து விட்டார்.

ஒருமுறை கலீபா இல்லாத சமயம் பார்த்து விதுஷகன் சிம்மாசனத்தில் அமர்ந்தான். உடனே அதிகாரிகள் அவனைப் பிடித்து இழுத்துத் தள்ளி தடிகளால் அடித்தார்கள். கலீபா வரும்போது விதூஷகன் வலியால் அழுது கொண்டிருந்தான். கலீபா என்ன நடந்தது எனத் தெரிந்து கொண்டு விதூஷகனைத் தேற்றினார்.

அப்போது விதூஷகன் "நான் வாங்கிய அடிகளுக்காக அழவில்லை. ஓரிரண்டு நிமிடங்கள் சிம்மாசனத்தின் மீது உட்கார்ந்த எனக்கு இவ்வளவு அடிகள் என்றால் ஆயுள் காலம் முழுவதும் சிம்மாசனத்தில் அமரும் உங்களுக்கு எவ்வளவு அடிகள் விழுமோ என்று நினைத்துத்தான் அழுதேன்" என்றான் அதுகேட்டு கலீபா

—அராபியக் கதை—

திகைத்து நின்றார்.

விதூஷகனுக்கு விவாகம் செய்து கொள்ளவே பிடிக்கவில்லை. ஆனால் கலீபா அழகான ஒரு அடிமைப் பெண்ணை பலவந்தமாக அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார். அன்றிரவு மணப்பெண் விதூஷகனின் பக்கம் போய் உட்கார்ந்தபோது அவன் ஐயோ அப்பா என அலறியவாறே எழுந்து அரண்மனையில் அங்கும் இங்கும் ஓடலானான்.

கலிபா அவனிடம் "அழகிய பெண்ணைப் பார்த்து ஏன் இப்படி ஓடுகிறாய்?" என்று கேட்டார். விதூஷகனும் "அவள் மனம் தனக்கு பட்டுப்புடவை வேண்டும். வைர நகைகள் வேண்டும் என்றெல்லாம் மெதுவாகத் தனக்குள் சொல்லிக் கொள்வது என் காதில் பலமாக விழுகிறதே நான் எப்படி வாங்கிக் கொடுப்பேன்? அதனால் தான் பயம்" என்றான்.

இப்படி விதூஷகன் கூறியது கலீபாவிடம் இருந்து பணம் பெறுவதற்காக அல்ல. ஏனெனில் கலீபா இருமுறை விதூஷகனுக்கு ஆயிரம் தினார்கள் வீதம் கொடுக்க முன்வந்த போது அவன் அதை ஏற்கவில்லை.

அப்போது கலீபா "நான் பணம் கொடுக்க முயன்ற போதெல்லாம் அதை நீ ஏற்க மறுத்தாய். அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார். அதற்கு பதில் கூறும் விதத்தில் விதூஷகன் தன் உள்ளங்



காலைத் தூக்கிக் கலீபாவின் முகத்திற்கு நேராகக் காட்டினான்.

இதைக் கண்ட வீரர்கள் அது கலீபாவிற்கு அவன் செய்த அவமரியாதை என நினைத்து விதூஷகனை அடிக்கப் போனார்கள். ஆனால் கலீபா அவர்களைத் தடுத்து விதூஷகனிடம் "ஏன் இப்படி மரியாதைக் குறைவாக நடந்து கொண்டாய்?" என்று கேட்டார் அதுகேட்டு சிரித்தவாறே விதூஷகனும் "நான் அப்போது பணத்தை கைநீட்டி வாங்கி இருந்தால் இப்போது உங்கள் முன் காலை நீட்ட முடியுமா?" என்றான்.

ஒருமுறை கலீபா போரில் வெற்றி பெற்றுத் திரும்பி வந்து கொண்டிருந்தார். அப்போது கலீபாவுடன் விதூஷகனும் இருந்தான். ஓரிடத்தில் முகாமிட்டபோது கலீபா 'தாகம்' எனக் கத்தியது கேட்டு விதூஷகன் ஒரு சிறு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான்.

அப்போது விதூஷகன் "இந்த நீர் சமயத்தில் உங்களுக்குக் கிடைக்காமல் இருந்தால் இதைப் பெற நீங்கள் என்ன விலை கொடுப்பீர்கள்?" என்று கேட்டான். கலீபாவும் "என் நாட்டில் பாதியைக் கொடுப்பேன்" என்றார்.

"இன்னொரு சந்தேகம். இப்போது நீங்கள் குடித்த நீர் உங்கள் வயிற்றில் கட்டியாகி இறுகிக் கொண்டு விட்டு வெளியே வராதிருந்தால் அதை வெளியே எடுக்க என்ன விலை கொடுப்பீர்கள்? என்று கேட்டான். கலீபாவும் "அதற்கும் என் நாட்டில் பாதியைக் கொடுப்பேன்" என்றார்.

"ஆக நீங்கள் குடித்த நீரும் அது கட்டியானதும் சேர்ந்துதான் உங்கள் நாட்டின் மதிப்பு என்றால் இதற்காக இப்படிப் போர் புரிவானேன்?" என்று கேட்டான்.

கலீபா அது கேட்டு வெட்கித் தலைகுனிந்து கொண்டார்.





# வீர ஹனுமான்



இராமர் சீதையை நோக்கிக் கூறிய கடும் சொற்கள் எல்லோரையும் திகைக்க வைத்தன. ஒரு நாளும் கடுஞ்சொற்களைக் கூறாத இராமர் அன்று அவ்வாறு கூறியது கேட்டு சீதை தலை குனிந்து நின்றாள். ஏனெனில் அவள் அது எல்லோர் முன்னும் ஏற்பட்ட அவமானம் என்று கருதினாள்.

அவள் மெல்லிய குரலில் "நீங்கள் கடுஞ்சொற்களைக் கூறினீர்கள். அவை என் காதால் கேட்கத் தகுந்தனவே அல்ல. இராவணனிடம் சிறைபட்டதால் நான் களங்கப்பட்டவளே என்றாகி விடாது. இராவணன் என் விருப்பத்திற்கு மாறாக என்னைக் கவர்ந்து வந்து சிறை வைத்தான். அது என் தவறல்ல. என்னால் தவிர்க்க முடியாதது தானே. என் மனம் உங்கள் நினைவை விட்டு அகலவில்லை. என்னைப் பற்றி நன்கு அறிந்த நீங்கள் இப்படிப் பேசுவது விந்தையாக இருக்கிறது. உங்களுக்கும் என்மீது எவ்வளவு அன்பு என்பதும் எனக்குத் தெரியும். அதனால் தானே என்னைத் தேடிக் கண்டுபிடித்து இராவணனைக் கொன்று என்னையும் மீட்டீர்கள். ஆனால் இப்போது நீங்கள் இப்படிக் கூறுவது என் தலைவிதி. அதன்படியே நடக்கட்டும்" என்றாள்.

பிறகு அவள் இலட்சுமணனிடம் "இலட்சுமணா! நீ கட்டை



களை அடுக்கு. நான் தீமூட்டி அதில் குதித்து என் உயிரை மாய்த்துக் கொள்கிறேன். போதும் இந்த அவமானம்'' என்றாள்.

இலட்சுமணன் சீதை கேட்டுக் கொண்டபடி மரக்கட்டைகளை அடுக்கி வைத்தான்.

தீ மூட்டப்பட்டது. சீதை தலை குனிந்தவாறே இராமரை வலம் வந்து எரியும் நெருப்பின் முன் நின்றாள். அவள் அதனைக் கை கூப்பி வணங்கி "அக்கினிதேவனே! நான் என் கணவரைத் தவிர வேறு எந்த ஆடவனையும் மனத்தால் கூட நினைத்தது இல்லை என்பது உண்மையானால் நீங்கள் என்னைப் காப்பாற்றுங்கள். அஷ்டதிக்பாலர்களே! நவகிரகங்களே! நீங்கள் யாவரும் என்னைக் கற்புக்கரசி எனக் கருதுவீர்களானால் இந்த நெருப்பு என்னை எரிக்க விடாமல் செய்வீர்களாக!'' என்று உரக்கக் கூறினாள். பிறகு எரியும் நெருப்பை வலம் வந்து அவள் அதனுள் குதித்தாள்.

திடீரென எரியும் நெருப்பு அணைந்தது. அதிலிருந்து அக்கினி தேவன் சீதையைக் கையில் ஏந்தியவாறே மானிட வடிவில் வெளியே வந்தான். சீதை எல்லா ஆபரணங்களுடனும் முன்பு அணிந்திருந்த அதே பட்டாடையுடனும் உடலில் எவ்வித காயமும் இல்லாமல் இருந்தாள். அவளது தலையின் கேசம் கூடக் கருகாமல் இருந்தது.

அக்கினி தேவன் இராமரிடம் "இராமா! இதோ உன் மனைவியான சீதை! இவள் ஒரு பாவமும் அறியாதவள். இவள் உன்னைத் தவிர வேறு எந்த ஆடவனையும் மனத்தாலும் நினைத்தது இல்லை. இராவணன் இவளை அசோக வனத்தில் சிறைவைத்து இராட்சஸப் பெண்களைக் காவல் வைத்துப் பலவிதத்திலும் இவளை பயமுறுத்தித் தன் இச்சைக்கு இணங்கும்படி கூறிப் பார்த்தான். ஆனால் இவள் எல்லாக் கஷ்டங்களையும் சகித்துக் கொண்டு மனஉறுதி தளராமல் இருந்தாள். இந்தக் கற்புக்கரசியை நீ ஏற்றுக் கொள். இது என்

கட்டளையும் கூட'' என்றான்.

அவர் அக்கினி தேவனைப் பார்த்து "அக்கினி தேவா! சீதை மாசுமருவற்றவள் என்பது உண்மையே. ஆனால் இராவணனின் உறைவிடத்தில் நீண்ட காலம் இருந்து விட்டாள். நான் சீதையைப் பரீட்சிக்காமல் ஏற்றுக் கொண்டிருந்தால் உலகத்தவர் என்ன சொல்வார்கள் தெரியுமா? தசரத சக்கரவர்த்தியின் மகனான இராமன் நீதி நியாயம் என்பதை அறியாதவன் என்றுதான். ஆனால் மூவுலகமும், உண்மையை அறிய வேண்டும் என்பதற்காக சீதை தீக்குளிப்பு செய்யும்போது எதுவும் கூறாமல் பார்த்துக் கொண்டே இருந்தேன். அவள்மீது எவ்வளவு அன்பு கொண்டவன் என்பது என் மனம் நன்கு அறியும். உங்கள் கட்டளைப்படி அவளை நான் ஏற்கிறேன்'' என்று பணிவுடன் கூறினார்.

அப்போது சொர்க்கலோகத்திலிருந்து ஒரு விமானத்தில் தசரத சக்கரவர்த்தி அங்கு வந்தார். அவரைக் கண்டதும் இராமரும் இலட்சுமணனும் சீதையும் வணங்கினார்கள். தசரதர் இராமரைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

பிறகு அவர் இராமரிடம் "இராமா! உன்னை விட்டுப் பிரிந்திருப்பதால் எனக்கு தேவலோக சுகமும் பிறர் எனக்குக் காட்டும் மரியாதையும் சற்றும் பிடிக்காமலே இருக்கிறது. நீ வன





இராமரும் தசரதரை வணங்கி "தந்தையே இன்னமுமா தங்களுக்கு என் சிற்றன்னை கைகேயியின் மீது கோபம்? அவர் எனக்கு நன்மைதான் புரிந்திருக்கிறார்" என்றார்.

தசரதன் இராமரைப் பாராட்டி இலட்சுமணன் தன் அண்ணன்பால் காட்டிய பாசத்தை மெச்சினார். பிறகு அவர் சீதையிடம் "நீ இராமனை விட்டுப் பிரிந்து இருக்கவே முடியாது. எனவே இதற்கு முன் அவன் கூறியதைப் பொருட்படுத்தாதே" என்றார். பிறகு அவர் எல்லோரையும் ஆசீர்வதித்து விட்டு விமானத்தில் ஏறி அமர்ந்து சொர்க்கலோகத்திற்குச் சென்றார்.

வாசத்தை முடித்ததோடு எதிரிகளை வென்றும் என்னை மிகவும் மகிழ்வித்திருக்கிறாய். உன்னை வனவாசத்திற்கு அனுப்ப வேண்டும் எனக் கைகேயி கேட்ட வரம் இன்னமும் என் மனதை வாட்டிக் கொண்டுதான் இருக்கிறது. இராவணனை நீ கொல்ல வேண்டும் என்பதற்காகத்தான் விதி உன் பட்டாபிஷேகத்தை தடை செய்து விட்டது என்பதை இப்போது நான் உணர்கிறேன். நீ இனி அயோத்திக்குச் சென்றால் கௌசல்யை மிகவும் மகிழ்வாள். நீ போய் மகுடாபிஷேகம் செய்து கொண்டு உன் தம்பிகளோடு சுகமாக இரு" என்றார்.

இச்சமயத்தில் இந்திரன் இராமர் முன்வந்து ஏதாவது வரம் கேட்கும்படிக் கூறினான். இராமரும் "எனக்காகத் தம் உயிரைத் தியாகம் செய்த வானரர்களை எல்லாம் மீண்டும் உயிர்பெற்று வரச் செய்ய வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். இந்திரனும் அப்படியே செய்வதாகக் கூறி இறந்துபோன வானரர்களை எல்லாம் உயிர்ப்பித்தான். போர்க்களத்தில் விழுந்து கிடந்த வானரர்கள் எல்லாம் உயிர் பெற்று எழுந்து மகிழ்ச்சியுடன் குதித்து ஆடினார்கள். இதைக்கண்ட மற்ற வானரர்கள் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள்.

மறுநாள் காலை இராமர் நீராடுவதற்காக விபீஷணன் நீரையும் வாசனை திரவியங்களையும் புதிய பட்டாடைகளையும் எடுத்து வந்தான். ஆனால் இராமர் விபீஷணனிடம் "சுக்கிரீவன் முதலியவர்கள் நீராடட்டும். நான் இப்போதே அயோத்திக்குப் போகவேண்டும். பதினான்கு ஆண்டுகள் முடிந்த மறுநாளே நான் வந்து அவனை காணாவிட்டால் என் தம்பி பரதன் அக்கினி பிரவேசம் செய்யப் போவதாகச் சபதம் செய்திருக்கிறான். எனவே அவனைக் காண்பதுதான் இப்போது எனக்கு முக்கியம். நீராடுதல் எல்லாம் பிறகுதான்" என்றார்.



அதைக் கேட்ட விபீஷணன் "தங்களை இங்கிருந்து ஒரே நாளுக்குள் அயோத்திக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட முடியும். குபேரனிடமிருந்து இராவணன் கொண்டு வந்த புஷ்பக விமானம் இன்னமும் இங்குதான் இருக்கிறது. அதில் செல்லலாம். அதற்கு முன் நான் தங்களுக்கும் இலட்சுமணனுக்கும் சீதைக்கும் செய்யும் மரியாதைகளை ஏற்க வேண்டும்" என்று பணிவுடன் கூறினான்.

இராமரும் "விபீஷணா! நீ போரில் செய்த மகத்தான உதவிகளே எனக்கு மரியாதை செய்தது போலத்தான். எனக்காக நந்திக் கிராமத்தில் இருந்து கொண்டு ஆட்சிபுரியும் பரதனை உடனே பார்க்க வேண்டும். என்று என் மனம் துடிக்கிறது. மேலும் என் தாய்மார்களான கௌசல்யை, கைகேயி, சுமித்திரை, குருதேவரான வசிஷ்டர் முதலியவர்களையும் உடனே பார்க்க விரும்புகிறேன். எனவே நீ இப்போதே புஷ்பக விமானத்தை இங்கே கொண்டு வரச் சொல். நான் அதில் ஏறி அயோத்தியை அடைகிறேன். எனக்கு விடைகொடுத்து அனுப்பு" என்றார்.

விபீஷணன் உடனேயே புஷ்பக விமானத்தைக் கொண்டு வரும்படிச் சொன்னான். நன்கு அலங்கரிக்கப்பட்ட அந்த விமானம்,



வந்ததும் "இன்னமும் நான் என்ன செய்ய வேண்டும்?" என்று விபீஷணன் கேட்டான்.

இராமரும் "வானரர்கள் எனக்குச் செய்த உதவியை அளவிட முடியாது. அவர்களுக்கு ஆடை ஆபரணங்களைக் கொடுத்து மரியாதை செய். அதனால் அவர்கள் மனம் குளிரும்" என்று கூறினார்.

இராமர் கூறியபடியே விபீஷணன் வானரர்களை கௌரவித்தான். அதன்பின் இராமர் சீதையுடனும் இலட்சுமணனுடனும் புஷ்பக விமானத்தில் ஏறி அமர்ந்தார். அப்போது அவர் யாவரையும் பார்த்து "நீங்கள் எல்லோரும் என் முயற்சியை வெற்றிபெறச் செய்தீர்கள். இனிமேல் நீங்கள் உங்கள் விருப்பப்படி எங்கு வேண்டுமானாலும் போகலாம். சுக்கிரீவா! நீ நண்பனாகவும் சகோதரன் போலவும் எனக்கு இருந்து எவ்வளவு உதவிகள் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்தாய். நீ உன் படைகளுடன் கிஷ்கிந்தாபுரிக்கு போய் சுகமாக இரு. நான் அயோத்திக்குக் கிளம்பிச் செல்கிறேன்" என்றான்.

அப்போது சுக்கிரீவனும் விபீஷணனும் மற்றவானரர்களும் "நாங்களும் அயோத்திக்கு உங்களுடன் வருகிறோம். எங்களையும் அழைத்துச் செல்லுங்கள் அங்கு எங்களால் மற்றவர்களுக்கு எவ்விதத் தொந்தரவும் இராது. உங்களது பட்டாபிஷேகத்தைக் கண்டுகளித்து விட்டு நாங்கள் திரும்பி எங்கள் இடங்களுக்குச் சென்று விடுகிறோம்" என்றார்கள்.

இராமரும் "நீங்கள் எல்லோரும் என்னுடன் வருவதாகக் கூறுவதைக் கேட்க மகிழ்ச்சியாகவே உள்ளது. சுக்கிரீவா! நீயும் விபீஷணா! நீயும் உன் மந்திரிகளுடன் வந்து புஷ்பகவிமானத்தில் ஏறிக் கொள்" என்றார்.

சுக்கிரீவனும் விபீஷணனும் மற்ற பிரமுகர்களும் புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டபின் அது ஆகாயவழியே செல்லலாயிற்று.

வழியில் இராமர் சீதைக்கு திரி

கூடமலை மீதுள்ள இலங்காபுரியையும் போர்க்களத்தையும் கடல் கடக்கக் கட்டியபாலத்தையும் கிஷ்கிந்தாபுரியையும் காட்டி நடந்த சம்பவங்களை விவரிக்கலானார். சீதையும் "நாம் அயோத்திக்குப் போகும் போது சுக்கிரீவனின் மனைவிகளையும் அழைத்துச் செல்லலாமே" என்று கூறினாள்.

இராமர் புஷ்பக விமானத்தைக் கிஷ்கிந்தையில் இறக்கி சுக்கிரீவனிடம் "சீதை தன்னோடு உன் மனைவியரையும் அழைத்துச் செல்ல விரும்புகிறாள். எனவே உன் மனைவியரிடம் சீதையின் விருப்பத்தைக் கூறி அவர்களை அழைத்துக் கொண்டு வா" என்றார்.

சுக்கிரீவனும் அரண்மனைக்குச் சென்று தன் மனைவிகளான ருமையிடமும் தாராவிடமும் சீதையின் விருப்பத்தைத் தெரிவிக்க அவர்கள் அயோத்திக்குச் செல்லத் தம்மை நகைகளாலும் அலங்கரித்துக் கொண்டார்கள். அவர்கள் வந்து சீதையைக் கண்டு சந்தோஷப்பட்டார்கள். பிறகு அவர்கள் புஷ்பக விமானத்தில் ஏறி அமர்ந்து கொண்டார்கள்.

விமானம் மீண்டும் உயரக் கிளம்பி ஆகாய வழியே செல்லலாயிற்று. அப்போது இராமர் சீதைக்கு தான் சுக்கிரீவனை முதன்முதலாகச் சந்தித்த ரிஷியமுக பர்வதத்தைக் காட்டினார். அதன் பம்பா தீரத்தையும் சீதையைத் தேடி அலைந்த இடங்களையும் கபந்தனைக் கொன்ற இடத்தையும் காட்டினார்.

விமானம் அத்திரி மகரிஷி ஆசிரமத்தையும் குகன் வசிக்கும் சிருங்க பேரிபர்வதத்தையும், சித்திர கூடத்தையும் பரத்வாஜ முனிவரின் ஆசிரமத்தையும் கடந்து சென்றபோது இராமர் அவற்றைச் சுட்டிக்காட்ட சீதைக்கும் அங்கு தனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் நினைவிற்கு வந்தன. முடிவில் புஷ்பக விமானம் அயோத்தியை அணுகலாயிற்று.






# பாட்டி கொடுத்த பணம்

செல்வி தன் தாயைத் தன் முதலாவது வயதிலேயே இழந்து விட்டாள். செல்வியின் தந்தை முத்தம்மாள் என்பவளை மணந்து கொண்டான்.

முத்தம்மாள் செல்வியைப் படாத பாடுபடுத்தி கசக்கிப் பிழிந்து வேலை வாங்கினாள். செல்விக்குப் பதினாறு வயதானதும் அவளை அவள் தன் தம்பியின் நண்பனான வேலுசாமிக்குக் கல்யாணம் செய்து பட்டணத்திற்கு அனுப்பி விட்டாள்.

வேலுசாமிதான் பெரிய உத்தியோகத்தில் இருப்பதாகக் கூறிக் கொண்டான். ஆனால் இரண்டொரு நாட்களிலேயே அவனுக்கு எவ்வித வேலையும் இல்லை என்றும் சூதாட்டம், திருட்டு முதலியவைகளில் ஈடுபடுகிறான் என்றும் செல்வி தெரிந்து கொண்டாள்.

அவள் தன் கணவனுக்கு அறிவுரை கூறி நல்ல வழியில் ஒரு உத்தியோகத்தைத் தேடி சம்பாதிக்குமாறு சொல்லிப் பார்த்தாள்.

வேலுசாமியோ "வேலையா? அதெல்லாம் நமக்கு சரிப்படாது. நிமிஷத்திற்கு நூறு ரூபாய் என்னால் சம்பாதிக்க முடியும். மாதம் பூராவும் உட்கார்ந்து யார் நூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருப்பார்கள்? அதெல்லாம் என்னால் முடியாது" என்று கூறினான்.

செல்வி எப்படியோ அவனுடன் ஆறு மாதங்கள் குடித்தனம் நடத்தினாள். ஒருநாள் அவளது பாட்டி மிகவும் உடல்நலம் குன்றிப் போனதாகத் தகவல் வரவே செல்வி அவளைக் காணச் சென்றாள். கட்டிலில் மெலிந்து உடலோடு படுத்துள்ள தன் பாட்டியைக் கண்டு அவள் கண்ணீர் வடித்தாள்.

—எஸ். சோபினி—



பாட்டியும் அவளைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டு "கவலைப்படாதே. நான் ஆயிரம் ரூபாய் சேர்த்து வைத்திருக்கிறேன். அதைக் கொண்டு உன் கணவனை ஒரு பெட்டிக்கடை வைத்து வியாபாரம் செய்யச் சொல்" என்று கூறித் தான் சேர்த்து வைத்திருந்த ஆயிரம் ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்துவிட்டு ஒரேயடியாகக் கண்ணை மூடிவிட்டாள்.

செல்வியின் தந்தை வந்து தன் தாயின் ஈமச் சடங்குகளைச் செய்தான். அதற்குப்பின் செல்வி பட்டணத்திற்குப் போய்த் தன் கணவனிடம் "இது என் பாட்டி கொடுத்த பணம். இதைக்கொண்டு ஒரு பெட்டிக் கடை வையுங்கள். நேர்மையாகச் சம்பாதித்து வாழலாம்" என்றாள்.

பணத்தை வாங்கிக் கொண்ட வேலுசாமியோ "பெட்டிக்கடையா! இந்த ஆயிரத்தை கொண்டு இன்று இரவிற்குள் லட்சம் ரூபாய் சம்பாதித்து வருகிறேன் பார்" என்று கூறிவிட்டு வெளியே போனான். அவன் சற்று தூரம் போனதும் அவன்முன் ஒரு குதிரை வண்டி வந்து நின்றது.

வண்டியில் உட்கார்ந்திருந்த ஒருவன் தலையை நீட்டி "ஈசுவரன் கோவிலுக்குப் போகும் வழி இது தானே" என்று கேட்டான். வேலுசாமி "இன்னும் கொஞ்சதூரம் போக வேண்டும். நாலைந்து தெருக்களைக் கடக்க வேண்டும்" என்றான். அப்போது வண்டிக்குள் இருந்தவன் "நீங்கள் அந்தப் பக்கம் போகிறவராக இருந்தால் ஏறிக் கொள்ளுங்கள். நான் இந்த ஊருக்குப் புதியவன். சரியாக வழி தெரியவில்லை" என்றான்.

வேலுசாமியும் வண்டியில் ஏறிக் கொண்டு வண்டிக்காரனுக்கு வழியைக் காட்டலானான். கோவிலை அடைந்ததும் வண்டியிலிருந்த மனிதன் சட்டெனக் கீழே இறங்கி அவசர அவசரமாகக் கோவிலுக்குள் சென்று விட்டான். அதன் பிறகே வேலுசாமி மெதுவாக வண்டியிலிருந்து இறங்கலானான். அப்போது

வண்டிக்குள் ஒரு கடிதம் கிடப்பது கண்டு அதை எடுத்துப் படித்துப் பார்த்தான். அதில் "அன்புள்ள பானுமதி! நான் ஒரு வேலையாகப் பட்டணம் போகிறேன். நீ அண்மையில் இருபத்தையாயிரம் ரூபாய் விலை கொடுத்து வாங்கிய வைரமாலை பிடிக்கவில்லை என்றும் அதை அழித்து வேறு டிசைனில் மாலை செய்யச் சொல்லும் படியும் சொன்னாய். நீ இப்போது ஈசுவரன் கோவிலுக்குப் பின்னால் இருப்பதால் இந்த மனிதனைக் கடிதத்தோடு அனுப்பியுள்ளேன். அவனிடம் மாலையைக் கொடுத்தனுப்பு. அதனைக் கொடுத்து வேறு மாலை நீ விரும்பியது போல வாங்கி வருகிறேன். இப்படிக்கு உன் கணவன் ராமசந்திரன்" என்று எழுதப்பட்டிருந்தது.

ஆகா! அதிர்ஷ்டம் தேடிவந்தது என எண்ணி வேலுசாமி கோவிலுக்குப் பின்னால் ஓடினான். அங்கே ஓரிடத்தில் இருபத்தைந்து வயதான பெண் ஒருத்தி நின்று கொண்டிருப்பதைக் கண்டான். அவன் அவளருகே போய் "நீங்கள் தானே பானுமதி?" என்று கேட்டான்.

அவளும் ஆம் என்று தலை அசைக்கவே வேலுசாமி கடிதத்தை அவளிடம் கொடுத்தான். அவளும் "இப்போதுதான் பார்வதியம்மாள் தனக்கு அவசரமாக ஆயிரம் ரூபாய் வேண்டும் என்று கேட்டாள். நான் என் மாலையைக்





கழற்றிக் கொடுத்து அடகு வைத்துப் பணம் வாங்கிக் கொள்ளச் சொன்னேன். அதனால் மாலையை இன்னொரு தடவை பட்டணம் வரும்போது மாற்றிக் கொள்ளலாம் என்று சொல்லுங்கள்'' என்றாள்.

அடடா, நல்ல வாய்ப்பு கை நழுவி விட்டதே என வேலுசாமி எண்ணினான். ஆனால் சட்டென அவன் மூளைக்கு ஒரு யோசனை தென்பட்டது. அவன் பானுமதியிடம் ''எஜமான் மறுபடியும் எப்போது பட்டணத்திற்கு வருவார் என்று சொல்ல முடியாது. என்னிடம் ஆயிரம் ரூபாய் உள்ளது. நீங்கள் இதைக் கொண்டுபோய் அந்தப் பார்வதியிடம் கொடுத்துவிட்டு மாலையை வாங்கி வாருங்கள். நான் எஜமானரிடம் சொல்லி இந்தப் பணத்தை வாங்கிக் கொள்கிறேன்'' என்றான்.

பானுமதியும் வேலுசாமி கொடுத்த ஆயிரம் ரூபாயை வாங்கிக் கொண்டு சற்று நேரத்தில் திரும்பி வருவதாகக் கூறிச் சென்றாள். வேலுசாமியும் அங்கேயே நின்று கொண்டிருந்தான். அரை மணி நேரமானது. பானுமதி திரும்பி வந்து ''நல்லவேளை! பார்வதி அடகுக் கடைக்குப் போகவில்லை. அவளுக்குத் தேவைப்பட்ட ஆயிரம் ரூபாயைக் கொடுத்துவிட்டு என் மாலையை வாங்கிக் கொண்டு வந்து விட்டேன். இதைக் கொண்டு போய் என் கணவரிடம் கொடுத்துவிட்டு மாலை ஒரு வாரத்திற்குள் வந்து விட வேண்டும் என்று சொல்'' என்று கூறி ஒரு கல் மாலையைக் கொடுத்தாள்.

பளபளக்கும் அந்த மாலையை வாங்கிக் கொண்டு வேலுசாமி ஒரேயடியாக மகிழ்ந்து போனான். இருபத்தையாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள அந்த மாலைக்குத் தனக்குக் குறைந்தது பத்தாயிரம் ரூபாயாவது கிடைக்கும் என நினைத்துத் தான் வழக்கமாகத் திருட்டு நகைகளை விற்கும் கடைக்குச் சென்றான்.

கடைக்காரன் அந்த மாலையை வாங்கிப் பார்த்துவிட்டு கோபத்

தோடு "என்ன வேலு! என்னிடமே உன் வேலைத் தனத்தைக் காட்டு கிறாயா? போலி நகைக்கு நன்கு தங்க முலாம் பூசிக் கொண்டு வந்திருக்கிறாயே! இன்னொரு தடவை இந்தக் கடைப்பக்கம் காலடி எடுத்து வைக்காதே" என்று கூறி அந்த மாலையை வேலுசாமியின் முகத்தில் விட்டெறிந்தான்.

வேலுசாமி திகைத்துப்போனான். தான் ஏமாந்து போனதை நினைத்து அவன் வெட்கப்பட்டான். தன் மனைவியிடம் என்ன சொல்வது என்று அவன் யோசிக்கலானான். அவன் வெகு நேரம் கழித்து வீடு சேர்ந்த போது ஒரே இருட்டாக இருந்தது. அவன் விளக்கை ஏற்றிப் பார்த்தபோது அங்கு செல்வி இருக்கவில்லை. ஒரு கடிதம் தான் இருந்தது.

"எனது உயிர்த் தோழியான பானுமதியும் அவளது கணவர் ராமசந்திரனும் உங்களுக்கு நல்ல பாடம் கற்பித்திருப்பார்கள் என நம்புகிறேன். ஒரு திருடனின் மனைவி எனக் கூறிக் கொள்வதை விட நான் இறப்பதே மேல். என் பாட்டி இறக்கும்போது எனக்குக் கொடுத்த ஆயிரம் ரூபாய் என்னிடமே வந்து சேர்ந்துவிட்டது. அது எனக்குத் தைரியத்தைக் கொடுத்திருக்கிறது. அந்தப் பணத்தைக் கொண்டு இரண்டு பசுக்கள் வாங்கி பால் விற்றுப் பிழைக்கப் போகிறேன். கௌரவமாக வாழ நினைக்கும் என்னைப் பார்க்க விரும்பினால் உங்கள் கெட்ட செயல்களை விட்டொழித்துவிட்டு என் ஊருக்கு வாருங்கள். இருவரும் பாடுபட்டுச் சம்பாதித்துக் குடும்பம் நடத்தலாம். இப்படிக்கு செல்வி"

அந்தக் கடிதத்தைப் படித்ததும் வேலுசாமி வெகு நேரம் யோசித்தான். மறுநாளே அவன் செல்வியின் ஊருக்குக் கிளம்பிவிட்டான் முற்றிலும் மாறிய புதுமனிதனாக.





# காளியின் தண்டனை

ஒரு கிராமத்தில் ஏகப்பன் என்ற ஏழை விறகு வெட்டி இருந்தான். அவன் தன் மனைவி மக்களைக் காக்க மிகவும் சிரமப்பட்டான். அவனுக்கு விறகு வெட்டி விற்ற பணம் குடும்பத்தை நடத்தப் போது மானதாக இல்லை. ஏதோ அரை வயிற்றுச் சாப்பாடுதான் கிடைத் தது.

ஒருநாள் அவன் காட்டிற்குச் சென்றபோது பலத்த மழை பெய்யவே அவன் ஓடிப் போய் ஒரு பாழடைந்த மண்டபத்தில் நின்றான். வெகு நேரமாகியும் மழை நிற்காமல் போகவே அவன் மனதில் "அடடா! இன்று விறகு வெட்ட முடியாது போலிருக்கிறதே. இன்று என் குடும்பம் பட்டினி கிடக்க வேண்டியதுதானா? என்று எண்ணிக் கவலைப்படலானான்.

அவன் என்ன செய்வது என்று சுற்றிலும் பார்த்தபோது மண்டபத்தில் ஒரு பக்கம் ஒரு பெரிய மரச் சிலை இருப்பதைக் கண்டான். அது காளி தேவியின் உருவச் சிலை. அது நனையாமல் உலர்ந்திருப்பது கண்டு ஏகப்பன் "இது காளியின் சிலையாக இருந்தால் எனக்கென்ன? இதை வெட்டிப் பிளந்து விறகாக்கி விற்றால் இன்று என் குடும்பத்தின் பசியைப் போக்கலாமே." என நினைத்து அதனருகே சென்று அதனைப் பிளக்கத் தன் கோடாலியை உயர்த்தினான்.

அப்போது சிலையிலிருந்து ஒரு குரல் "நில். வெட்டாதே. என்னையா பிளக்கப் போகிறாய்? நான் யாரென்று தெரியுமா?" என்று அதட்டியது. ஏகப்பன் உடனே கோடாலியைத் தாழ்த்தி பணிவாக "தாயே! எங்கும் மழை பெய்து நனைந்துவிட்டதால் வேறு

—காரை. குருமூர்த்தி—

உலர்ந்த மரக்கட்டை எதுவும் கிடைக்கவில்லை. விறகு வெட்டி இன்று விற்காவிட்டால் என் குடும்பம் பசியால் வாடுமே என்று நினைத்தே இதைப் பிளக்க முயன்றேன். நீங்கள் இதில் இருப்பது தெரியாது. அதனால் என்னை மன்னித்து விடுங்கள்" என்று வேண்டினான்.

காளியும் "ஓ! உன் நிலை என்ன என்று எனக்குத் தெரிந்து விட்டது. பசி வந்திடப் பத்தும் பறந்துதான் போகும். உன் மீது எனக்குக் கொஞ்சமும் கோபம் இல்லை. நீ சுகமாக வாழ ஒரு வழி செய்கிறேன். நீ வீட்டிற்குப் போய் ஒரு புதுப் பானையை எடுத்து என்னை நினைத்துக் கொண்டு எரியாத அடுப்பின்மீது வை. உடனே அதில் உன் குடும்பத்திற்கு வேண்டிய அளவிற்கு அறுசுவை உண்டி கிடைக்கும். இன்று முதல் உனக்கு உணவுப் பிரச்னை என்பதே இராது"என்றாள்.

ஏகப்பன் தன் கையிலிருந்த கோடாலியைத் தூர எறிந்துவிட்டு காளி தேவியை வணங்கினான். பிறகு அவன் மழையைக் கூடப் பொருட்படுத்தாமல் அங்கிருந்து சென்று தன் வீட்டை அடைந்தான்.

தன் கணவன் கோடாலி கூட இல்லாமல் வெறுங்கையுடன் வருவதைக் கண்டு ஏகப்பனின் மனைவி "ஏன்! விறகு வெட்டிக் கொண்டு வரவில்லையா?" என்று





கேட்டாள். ஏகப்பனும் "கவலைப் படாதே. இன்று முதல் நமக்கு வயிறு நிறையச் சாப்பாடு கிடைக் கும். இவ்வாறு காளிதேவி நமக்கு அருள் புரிந்திருக்கிறாள்" என்று கூறிக் காட்டில் நடந்ததை எல் லாம் கூறினான்.

ஏகப்பனின் மனைவி ஓடிப் போய் ஒரு புதுப்பானையை எடுத்து வந்தாள். ஏகப்பனும் அவளும் காளிதேவியை எண்ணியவாறே அதனை அடுப்பின் மீது வைத்தார் கள். சற்று நேரத்திற்குப்பின் அதன் மூடியை எடுத்துப் பார்க்கவே அதில் அறுசுவை உண்டி இருந்தது. அவனும் அவன் மனைவியும் மக் களும் அது போன்ற சாப்பாட்டை அதற்குமுன் சாப்பிட்டதே இல்லை. அன்றிரவு அவர்கள் நிம்மதியாகத் தூங்கினார்கள்.

அன்று முதல் ஏகப்பனின் குடும் பத்திற்கு சாப்பாடு இல்லையே என்ற கவலை ஏற்படவில்லை. அவர்கள் சாப்பிட்டது போக மீத முள்ள உணவை மற்றவர்களுக்குக் கொடுத்தும் வந்தார்கள்.

ஏகப்பனின் வீட்டுக்குப் பக் கத்து வீட்டில் வீராசாமி என்ற வசதி படைத்தவன் இருந்தான். அவன் மனைவி ரங்கம்மாள். கஞ் சிக்கே தவித்த ஏகப்பனின் குடும் பம் தினமும் நல்ல சாப்பாடு சாப் பிடுவதை அவள் கவனித்தாள். அதெப்படி அவர்கள் தினமும் நல்ல சாப்பாடு சாப்பிடுகிறார்கள் என்று அவள் யோசிக்கலானாள். முடிவில் இதில் ஏதோ இரகசியம் இருக்கிறது என்றும் அதைக் கண்டு பிடிக்க வேண்டும் என்றும் அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

ஒரு நாள் அவள் ஏகப்பனின் கடைசி மகனைக் கூப்பிட்டு "உன் அப்பா காட்டிற்குப் போய் விறகு வெட்டிக் கொண்டு வருவதும் இல்லையே. உன் அம்மா எப்படி சாமான் வாங்குகிறாள்? சமைக் கிறாள்?" என்று கேட்டாள்.

அந்தச் சிறுவனும் "என் அம்மா சாமான் வாங்கப் போகவும் வேண் டாம். அடுப்பை மூட்டிச் சமைக்க வும் வேண்டாம். அவள் காளி

தேவியை நினைத்துக் கொண்டு பானையை எடுத்து வெறும் அடுப்பின் மீது வைத்தால் போதும். அதில் எங்களுக்குத் தேவையான விருந்து சாப்பாடே கிடைத்து விடும். இது காட்டிலுள்ள காளி தேவியின் அருள்" என்று எல்லாம் விவரமாகக் கூறினான்.

அதைக்கேட்ட ரங்கம்மாவிற்கு ஏகப்பன் மனைவிமீது பொறாமை ஏற்பட்டது. அவள் அன்று சமையல் செய்யாமல் தன் கணவன் வீட்டிற்கு வரும் வரை முக்கி முனகி கொண்டு ஒரு மூலையில் படுத்துக் கிடந்தாள். வீராசாமி சாப்பிட வீட்டிற்கு வந்தபோது எதுவுமே இல்லாதது கண்டு "ஏன்? சமைக்கவில்லையா?" என்று கேட்டான்.

ரங்கம்மாளும் "யார் யாரோ அடுப்பைக் கூட மூட்டாமல் உணவு வரவழைக்கிறார்கள். அவர்களுக்குக் காளி தேவியின் அனுக்கிரகம் இருக்கிறதாம். அந்த அருள் உங்களுக்குக் கிடைக்காதா? நீங்கள் என்ன அவனைவிட மட்டமா? தைரியமாய்ப் போய் ஏகப்பன் பெற்ற வரத்தை நீங்களும் பெற்று வாருங்கள்" என்று கூறி அனுப்பினாள்.

வீராசாமியும் தன் மனைவி சொன்னபடி நடக்காவிட்டால் தனக்கு போஜனம் கூடக் கிடைக்காது எனப் பயந்து கோடாலியை



எடுத்துக் கொண்டு காட்டிற்குக் கிளம்பினான். அவன் அந்த மண்டபத்தைத் தேடிக் கண்டு பிடித்தான். அங்கு காளிதேவியின் மர விக்கிரகம் இருப்பதைக் கண்டு அதனருகே சென்றான்.

அவன் அதைப் பிளக்கத் தன் கோடாலியை உயர்த்தினான். மறு வினாடி நிலமே அதிர்ந்தது. விக்கிரகத்திலிருந்து மின்னல் போல ஒளி கிளம்பி அவனது கண்களில் பாய்ந்தது அவன் பார்வையே இழந்தான். யாரோ தன்னை உதைப்பது போல அவன் உணர்ந்தான்.

அப்போது காளிதேவி "அடே கயவா! என்னையா வெட்டப் பார்க்கிறாய்? நான் யார் என்று

தெரியுமா?" என்று இடி இடிக்கும் குரலில் கேட்டாள். வீராசாமி நடுநடுங்கினான். அவன் உடல் முழுவதிலும் எரிச்சல் கண்டது.

அவன் கைகூப்பி வணங்கி "தாயே! என்னை மன்னித்து விடுங்கள். நான் செய்தது மாபெரும் பாதகச் செயலே. ஆனால் இவ்வாறு செய்யச் சொன்னது என் மனைவியே. இப்படிச் செய்த என் பக்கத்து வீட்டுக்காரன் ஏகப்பனுக்குத் தாங்கள் அருள் புரிந்தீர்கள். அவ்வாறு நானும் செய்தால் தங்கள் அருள் கிடைக்கும் என்று சொல்லித்தான் என் மனைவி அனுப்பினாள்" என்றான்.

காளிதேவியும் "ஏகப்பன் ஏழை. நீயோ பணக்காரன். உன் செயலை நான் ஏன் மன்னிக்க வேண்டும்?" என்று கேட்டாள். வீராசாமியும் "நான் அறியாமல் செய்த பிழை. எனவே என்னை மன்னித்து விடுங்கள்" என்றான்.

காளிதேவியும் "ஒரு நிபந்தனையின் மீது உன்னை மன்னிக்கிறேன். ஏகப்பனுக்கு வரம் அளித்த போது அவனது சாப்பாட்டில் நெய் கொடுக்க மறந்து விட்டேன். அதனால் நீ தினமும் அவனுக்கு ஒருபடி நல்ல நெய் கொடுத்து வரவேண்டும். இதற்குச் சம்மதித்தால் உன்னை மன்னித்து உனக்குப் பார்வை கிடைக்கும்படி செய்கிறேன்" என்றாள்.

வீராசாமியும் "அப்படியே செய்கிறேன்" என உறுதி கூறவே அவன் இழந்த பார்வையைப் பெற்றுவிட்டான். அவன் தன் வீட்டிற்குப் போய்த் தன் மனைவியிடம் நடந்ததைக் கூறி "உன் பேச்சைக் கேட்டதால் எனக்குக் காளிதேவியின் இந்த தண்டனை கிடைத்தது. நீ தினமும் ஏகப்பனின் வீட்டிற்கு ஒருபடி நெய் அனுப்பு" என்றான்.

வேறு வழியில்லாமல் ரங்கம்மா தினமும் ஏகப்பனின் வீட்டிற்கு நெய் அனுப்பி வரலானாள்.



# இயற்கை விநோதங்கள்

## தங்க மரம்



எங்களிடம் ஆயிரம் ரூபாய் கொடுத்து ஒரு தேக்கு கன்றை வாங்கி நடுங்கள். இருபது ஆண்டுகள் அதனை வளர்ப்பது எங்கள் பொறுப்பு. அதன் பிறகு அதன் மதிப்பு நீங்கள் செலுத்தியதைபோல நூறு பங்கு. அதாவது லட்சம் ரூபாய் கிடைக்கும். இம்மாதிரி விளம் பரங்கள் இப்போது வருவதைக் காண்கிறோம். எனவே தேக்கு தங்கம்போல மதிப்பு பெறுகிறது. தாய்நாட்டு இரு ஆராய்ச்சி யாளர்களோ 'டேக்' என்றால் தங்கம் என்கிறார்கள். நிஜம்தான். ஏவியவுன் என்ற தேக்குத் துண்டை ரம்பத்தால் அறுத்தபோது அதன் பற்களிடையே தங்கத்தூள்கள் ஒட்டி வந்ததைக் கண்டார் கள். இத்த வகைத்தேக்கை அவர்கள் 'சாக்தாங்க்' என்கிறார் கள். தாய்நாட்டு மொழியின் சாக் என்றால் தேக்கு என்றும் தாங்க் என்றால் தங்கம் என்றும் பொருளாம். இது தமிழில் தங்கம் என்பது போலத்தான்.



## மரங்களுக்கு வளையல்கள்

இந்நாட்களில் பலவித சங்கங்கள் ஏற்படுவதைக் காண் கிறோம். மரங்கள் சங்கம் என்று கேட்டிருக்கிறீர்களா? உத்தரபிரதேசத்தில் 'எலைட் மதர் ட்ரீஸ்' என்ற அமைப்பு உள்ளது. வேம்பு, கொய்யா, புளி, மா போன்ற 3500 வகை மரங்கள் இந்த அமைப்பில் உறுப்பினர்கள். உறுப்பினரான இந்த மரங்களிலிருந்து நல்ல முதிர்ந்த விதைகள் எடுக்கப்படுகின்றன. இதில் உறுப்பினராக ஒரு மரம் நல்ல வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும். பூச்சி புழுக்கள் அரித்திருக்கக் கூடாது. இலைகள் அடர்த்திருக்க வேண்டும். இம்மாதிரி மரங்களை மதர் ட்ரீஸ் (தாய் மரங்கள்) என்கிறார்கள். ஒரு மரம் உறுப்பினரானதும் அதன் அடிப்பகுதியில் மஞ்சள் பச்சை வளையம் வரையப்படும். அதன்பின் அதன் விதைகளை எடுத்து முளைக்க வைத்துப் பரீட் சித்துத் திருப்தி அடைந்த பின் அடிமரத்தில் இரண்டு வளையங் களை வரைகிறார்கள். அதன் விதைகளை வேறு இடங்களில் ஊன்றி நல்ல மரங்கள் முளைத்தால் தாய் மரத்தின் அடியில் மூன்று வளையங்களை வரைவார்கள்.



## உயரமான மரம்

கலிபோர்னியாவில் ஹம்போர்டு மாநிலத்தில் இருக்கும் சிவப்பு சந்தன மரம் மிக உயரமானது. இதன் உயரம் 113 மீட்டர். இதுதான் இப்போது உலகில் உயரமான மரமாம். 1988ல் இதன் அடிமர வளையங்களைக் கொண்டு இது 3000 ஆண்டுகளாக இருந்து வரு கிறது எனத் தீர்மானித்திருக்கிறார்கள். ஆஸ்திரேலியாவின் யூகாலி புடஸ் மரங்களும் மிக உயரமானவை. இவற்றில் ஒன்று 143 மீட்டர் உயரம்கூட இருந்ததாம்.




Your child and Coon
You just can't keep them apart.

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



T.C. Jain

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூலை 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### மே மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **துணை இருப்பதால் ஆட்டம்**

இரண்டாவது போட்டோ: **துணை இல்லாததால் வாட்டம்**

பரிசு பெற்றவர்: **மலை அரசன், அருகந்தம்பூண்டி**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள் அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்